## பாப்பாவின் பச்சிளம் சருமத்தில் முத்தமிடுதல்போல் மென்மையானது

ஜான்ஸன்ஸ் பேபி சோப்—
பாப்பாவின் சிறிய உலகின் சில
சிறந்த பொருட்களில் ஒன்றாகும்.

பாப்பா மீதான உங்கள் ஸ்பரிச
மென்மையும் பாசமும்
போன்றதாகும் ஜான்ஸன்ஸ்
பேபி சோப்பில் உள்ள லனோலின்.
மென்மை மணம் வழங்குகிறது
ஜான்ஸன்ஸ் பேபி சோப—
நாளெல்லாம் குழந்தைக்கு
நறுமணம் தருகிறது.




ஜான்ஸன்ஸ் பேபி சோப்
தூய்மையானது...மென்மையானது...
பாதுகாப்பானது

Johnson & Johnson

பண்டைக்காலம் முதல் பிரசித்தமான கிராம்புத்
தைலத்தின் குணதிசயங்களின் பயனைப்பெற ஆயிரக்
கணக்கான குடும்பங்கள் இப்பொழுது

# கிராம்புத் தைலம்

கொண்ட

# ப்ராமிஸ்

உபயோகிக்கிறார்கள். நீங்களும் உபயோகியுங்கள்




**ப்ராமிஸ்**

- பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது.
- வாய்க்குப் புத்துணர்ச்சி தருகிறது.
- துர்நாற்றத்தை அகற்றுகிறது.









சர்வதேச கோல்ட் மெடல் பெற்ற தயாரிப்புகள்

ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சி மிக்க மூச்சு

பல்ஸாரா தயாரிப்பு

CHAITRA-BLS-668 TAM

மே '84

இங்கே...

சிலர் உண்மையைப் பேசுகிறார்கள். ஆனால் தாங்கள் யார் என்று அடையாளம் காட்டிக் கொள்ள அவர்களில் சிலர் விரும்பவில்லை. காரணம் அது அவர்களை, குடும்ப வாழ்வை, அலுவலக வேலையைப் பாதிக்கும் என்பதால்... அவர்களின் உணர்வுக்கு மதிப்புக்கொடுத்து உண்மையைத் தெரிந்து கொண்டால் போதாதா? அவர்கள் யாராய் இருந்தால் என்ன?

# 'மே' தினமா, எங்களுக்கா?

**தொலைபேசி அலுவலகத்தில்**
**வேலைபார்க்கும் திருமதி கௌரிபாய்**

''எங்க ஆ பி ஸ் ல கல்யாணம் ஆகி இரண்டே வருடத்தில-

''மேடம், நான் ஏன் கல்யாணம் பண்ணி கிட்டேன்னு தெரியலே. என்னால இந்தச் சித்திரவதையைத் தாங்க முடியலே.''

என்று அழுகிற பெண்கள் தான் அதிகம். எங்களுடைய டியூட்டிபடி ஒரு நிமிஷம் கூட 'லேட்'டா வரக் கூடாது. வீட்டிலோ, ஆண்களின் ஆதிக்கம். ஒரு பெண் சொன்னாள்-

''நான் நைட் டியூட்டி பண்ணிட்டு வேகவேகமா வீட்டுக்குப் போனேன். ரெஸ்ட் எடுக்க எங்க நேரம்? குழந்தைங்களுக்கு ஸ்கூலுக்கு நேரமாயிடிச்சேன்னு புடவையை இழுத்துச் செருகிண்டு நேரா சமையலறைக்குத் தான் போவேன். குக்கர் வச்சு டயமாச்சேன்னு இறக்கிக்கிட்டு இருக்கேன்

''கோமதி .''ன்னு எங்க மிஸ்டர் கூப்பிட்டார். என்னவோ ஏதோன்னு விழுந்தடிச்சுட்டுப் போனா 'கீழ விழுந்துட்ட பேப்பர எடுத்துக் கொடு'ங்கறார்! எனக்கு எப்படியிருக்கும்?'' என்றாள்.

இன்னொருத்தி ''மேடம் நான் என் மாமியாரை எவ்வளவோ திருப்திப்படுத்த பார்க்கிறேன். வர்றவரை வேலை செய்யறேன். சம்பளக் கவரை கொடுத்துடறேன். ஓ.டி. பணமும் போயிடறது... அப்படியும் குடும்பச் செலவுக்குப் பத்தலேங்கறாங்க.. ஆறு அடுத்த மகன் பாக்கெட் செலவுக்குன்னு வச்சுக்கிட்டு மீதிக் கொடுக்கிற பணத்தைப் பத்தி ஒண்ணும் சொல்றதில்லை. ஓய்வு ஒழிச்சல் இல்லாம வேலை செய்யும் போது. ஏண்டா இந்தப் பிறவி எடுத்தோம்' என்றிருக்கிறது. இத்தனை செய்தும் யாரிடமும் நல்ல பேரில்லையே என்று நினைக்கும்போது தற்கொலையே செய்து கொள்ளலாம் போலிருக்கிறது'' என்று புலம்புகிறாள்.

இந்தக் காலத்துப் பெண்கள் இரட்டைப் பொறுப்பைத் தாங்க வேண்டி இருக்கிறது. அலுவலகம் சென்று ஆண்களுக்கும் சமமாகச் சம்பாதிக்க வேண்டும். வீட்டுக்கு வந்து வீட்டிலுள்ள பெண்களுக்கும் அதிகமாக வேலை செய்ய வேண்டும். இல்லையென்றால் வேலை செய்யற கர்வம் என்று இடிப்பார்கள். இருபக்கமும் திருப்திப்படுத்த ஓடி ஓடி உழைத்து விரைவில வெறுப்பின் எல்லைக்கே போய் விடுகிறார்கள்.

**உழைக்கும் மகளிர் சங்கத்தில்**
**உறுப்பினரான திருமதி வசந்திராவ்**

பெண்களின் பொறுப்பு இந்தக் காலத்தில் மிக அதிகமாகத்தான் உள்ளது. ஏகப்பட்ட சிரமங்கள். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் அத்தனையையும் தாண்டி கொஞ்சம் சமுதாயத்தின் பக்கமும் இன்றைய பெண்கள் திரும்ப வேண்டும். என் வீடு.



என் குடும்பம் என்ற அளவோடு நின்றுவிட்டால் போதாது. பெண்களில் எத்தனை எத்தனை பேர் பேப்பர் படிக்கிறார்கள்? கேட்டால் 'அதற்கெல்லாம் எங்கே நேரம் இருக்கிறது?' என்பார்கள். ஆனால் கதைப் புத்தகங்களோ, வார, மாத சஞ்சிகைகளோ படிக்காமலா இருக்கிறார்கள்? அதைப் போல ஒரு ஐந்து நிமிடமாவது பேப்பர் படிக்க வேண்டும்; நம்மைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.



வேலை செய்யும் படித்த பெண்களாகிய நாம்தான் இன்றைய பெண்களிடையே சமுதாய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும். நாமே ஒதுங்கி விட்டால் அப்புறம் படிக்காத பெண்கள் எங்கிருந்து திருந்தப் போகிறார்கள்? ஒவ்வொரு படித்த பெண்ணும் தன்னால் முடிந்தது, சமுதாயத்தைப் பற்றிச் சிந்திக்கவாவது செய்யலாமே! சிந்தனையே செயலுக்கு ஆரம்பமாக முடியும்!''

### ஏற்றுமதிக்கான ரெடிமேட் துணிகளைத் தைக்கும் தொழிற்சாலையில் வேலைசெய்யும் பெண்:-

''சமுதாய உணர்வா? என்னை ஒரு நிமிடம் பாருங்கள். அப்புறம் அதைப் பற்றிப் பேசுங்கள். நானும் என் குடும்பத்தின் ஐந்து பேரும் இன்றைக்குப் போல என்றைக்கும் ஒருவேளை கஞ்சி குடிப்போமா என்றிருக்கிறோம். தயவு செஞ்சு என்பேரு, போட்டோவைப் போட்டு அதையும் கெடுத்திடாதீங்க.

பீஸ் ரேட்ல தான் நான் வேலை பார்க்கிறேன். அவங்க கொடுக்கிற மணிநேரத்திற்குள்ளே நிறைய தைக்கணும்னு வேக வேகமாத் தைச்சி இடுப்பும் காலும் விட்டுப் போச்சு. ஏதாவது கொஞ்சம் பிசிறுப் போனாலும் முதலாளி எங்களைத் திட்டுற திட்டு... இப்படியும் நிக்க வேலை பாக்கணுமான்னுதான் அந்த நிமிஷம் தோணும். ஆனா ஒண்ணும் பேச மாட்டோம். ஏன்னா உருப்படிக்கு எட்டணா குறைச்சு வாங்கிட்டுத் தைக்க இன்னொருத்தி ரெடியா வாசலிலேயே காத்திருக்கா.

சாயங்காலம் கூட்டத்துல பஸ்ஸைப் பிடிச்சு சோர்வா வீட்டுக்குப் போய் முக்கால் வயிறு சோத்தைத் தின்னுட்டு அப்பாடின்னு விழுந்தா காலையிலதான் முழிப்பு வரும். என்னிக்காச்சும் ஒருநாள் அம்மா 'ரேவதிக்கும் இருபத்தி மூணு முடியுது'ன்னு முணு முணுப்பாங்க அதோட சரி.

இதுல என்னங்க சமூக சேவை செய்யறது?''

அந்தப் பெண்ணின் உக்கிரம் நிறைந்த பார்வை கொஞ்சம் தள்ளிப் போகச் செய்கிறது.

### டெலிபோன் டிபார்ட்மெண்டில் வேலைசெய்யும் கிருஷ்ணவேணி-

''எங்களையும் விடக் குறைந்த நிலையில் இருக்கற வேலை செய்யும் பெண்களைப் பார்க்கறப்போ, நாங்களே பரவாயில்லை என்றுதான் தோன்றுகிறது. அட்லீஸ்ட் எங்களுக்கு 'ஜாப் செக்யூரிட்டி' யாவது இருக்கிறது. அந்த வகையில் எங்களுடைய யூனியன் மிகவும் ஸ்டிராங். அதை முழுமையாக நாங்கள் பெண்களே நடத்தி வருகிறோம். எனவே மேலிடத்தில் இருப்பவர்கள் எங்களுடைய கோரிக்கைகளுக்கு ஓரளவு செவி சாய்க்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

எங்களிடையே உள்ள பெண்களும் ஆபீஸ் வேலை, வீடு என்றுதான் உழலுகிறார்கள். ஆபீஸ் விட்டு ஐந்து நிமிடம் கூட நிற்க மாட்டார்கள். ஏனெனில் வீட்டில் அவர்களுக்கான கடமைகள்,



கௌரிபாய் வசந்திராவ் கிருஷ்ணவேணி

வரிசையாகக் காத்திருக்கின்றன எனவே அவர்களைச் சொல்லியும் குத்தமில்லை.

இருந்தாலும் எங்களைப் போன்ற சிலர் இந்த வட்டத்தை விட்டு வெளியே வந்து பார்க்கிறோம் என்றால் அதற்கு எங்களுடைய யூனியன்தான் முழுமையான காரணம். எங்கெங்கு பெண்கள் நியாயமான கோரிக்கைக் குரல் எழுப்புகிறார்களோ அங்கெல்லாம் நாங்கள் அவர்களுக்கு உதவச் செல்கிறோம்.

அது தவிரவும் உலக நடப்புக்களைக் கூர்ந்து கவனிக்கிறோம். எங்களுடன் வேலை பார்க்கும் பெண்களுக்கும், 'சமுதாய உணர்வோடு இருங்கள்' என்று வற்புறுத்துகிறோம். வெறும் இயந்திரமாக மாறிவிடாதீர்கள்; உங்களுக்கும் சமுதாயக் கடமையுண்டு என்று வற்புறுத்துகிறோம்.'

## விதியோரம் இட்லி சுடும் ஆயா:

''இன்னைக்கு லீவு போட்டா என் வயத்துக்கு யாரு சோறு போடுவாங்க? நானு பெத்தேன். நாலும் அது அது தொழிலைப் பாத்துக்கிட்டுப் போயிடிச்சுங்க. என்னிக்கும் என் கைதான் எனக்கு உதவி. நா என் னுத்த கதையச் சொல்றது? என்னைப்பாத்தாலேப் போதுமே. நாலு பேரு பாடம் படிச்சிக்கலாம்.

பொம்பிளைங்க. அது படிச்சதோ படிக்காததோ தன் கையில ஒரு தொழில வச்சுக்கணும். அப்பத்தான் என்னிக்கும் நிமிந்து நிக்க முடியும். இந்த ஆம்பிளைங்களை நம்ப முடியலையே! எப்ப அன்பாப் பேசுவான், எப்ப எப்டி உதப்பான்னே தெரியலையே! என்னுத்த இவங்களோட வாழுறது. நம்ப கையில தொழிலு இருக்கணும், மனசுல தகிரியம் இருக்கணும். அது போதுங்க!''

## கான்வென்டில் வேலை பார்க்கும் பட்டதாரி ஆசிரியை...

''உங்களால் நம்ப முடியுதா? எனக்கு நூறு ரூபாய் சம்பளம். நான் எம். எஸ்.ஸி. மேத்ஸ். எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்சுல பதிஞ்சு வச்சிருக்கேன். எனக்குன்னு ஒரு மகோன்னதமான காலம் வராதான்னு சாதகபட்சியா ஏங்கிட்டு இருக்கேன்.

வீட்ல இருந்தா மனசே, உடைஞ்சுப் போயிடும். அதுக்காக இந்தக் குழந்தைகளுடைய முகத்தைப் பார்த்தாவது நிம்மதி கிடைக்காதான்னு தான் இங்க வர்றேன். காலேஜ் டேஸ்ல இந்த இருட்டு தெரியலை. இப்போ இப்ப எதிர்காலமும் புரியலை.

மாப்பிள்ளை பாக்கறாங்க. ஆனா வேலை, கல்யாண மார்க்கெட்ல ஒரு அடிஷனல் குவாலிபிகேஷன். வேலைன்னு நான் பார்க்கற டெம்ப்ரவரி ஜாப் இல்லை. பெர்மனண்டான வேலை. மாசம் ஆயிரத்து ஐநூறு வாங்கற பாங்க் க்ளார்க்காகவோ இல்லைன்னு கவர்ன்மெண்டிலே எல். டி. ஸி. யாகவோ இருக்கணும். அட்லீஸ்ட் நல்ல பாபுலரான பிரைவேட் கம்பெனியாகவாவது இருக்கணும. இல்லேன்னு என்னைக் கல்யாணம் பண்ணிண்டு என்ன பிரயோஜனம்? வேலைக்குப் பதிலா பதினைஞ்சாயிரம் வரதட்சணை கொடுக்கத்தான் வக்கிருக்கா?

என் வாழ்க்கையே எனக்குச் சுமையா இருக்கு. ரிஜிஸ்டர்லே ஐநூத்தி சொச்சம் கையெழுத்துப் போட்டுட்டு நூறு ரூபாய் வாங்கறப்ப படற வேதனை... வெளிய சொல்ல முடியாம கல்யாணம் பண்ணவும் காசு இல்லாம வருத்தப்படற அம்மா, அப்பாவப் பாக்கறப்பவும் வருத்தமாத்தான் இருக்கு. இதுல நான் என்னங்க சமுதாயத்தைப் பத்தி, அரசியலைப் பத்தி பெண்களைப் பத்திச் சிந்திக்கிறது?''

பேட்டி, தொகுப்பு: **மஞ்சுளா ரமேஷ்**



எலுமிச்சம் பழச்சாறு, கசகசா, தேங்காய்ப்பால் கலந்து முகத்தில் பூசி வைத்திருந்து, சிறிதுநேரம் கழித்து, பயத்தமாவு சேர்த்து, குளித்து வந்தால் முகத்தில் உள்ள கரும்புள்ளிகள் மறைந்து விடும்.

—கிருஷ்ணவேணி.



# Only Jain




## ஜெயின் வீட்டுப்பாத்திரங்களுக்கு ஒரு கலைக்கோவில்

இறக்குமதி செய்யப்பட்ட காந்தச்சக்தியில் கவரப்படாத
18/8 ஸ்டெயின்லஸ் ஸ்டீல் தகடால் செய்யப்பட்டவை




பல வகைகளில், எல்லா பிரபல ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
ஷோரூம்களில் கிடைக்கும்.

## ஜெயின் ஸ்டெயின்லெஸ்

46, ரகுநாயகுலு தெரு, பார்க்டவுன்,
சென்னை-600 003. போன் : 31545

15 வருடங்களாக நம்பிக்கை
பெற்ற பெயர்

CHARI

எனக்கு மிகவும் நெருங்கிய நண்பர் ஒருவரின் நான்கு வயதுப் பையன் மிகவும் துறுதுறுப்பு. அந்தக் கறுப்புத் திராட்சை போன்ற கண்கள் எப்போதும் குறும்பில் பளபளவென்று மின்னிக் கொண்டிருக்கும். வெள்ளை வெளேரென்ற அவனுடைய நிறமும், அழகும் பார்க்கும் போதே அள்ளி அணைத்துக் கொள்ளலாம் போல இருக்கும்.

நடுவில் நான் கொஞ்சம் டில்லிக்குப் போக வேண்டியது இருந்தது. எப்படியோ கிட்டத்தட்ட ஒன்றரை ஆண்டுகள் ஆகி விட்டன அந்த நண்பரை மீண்டும் சந்திப்பதற்கு. எங்கள் பேச்சுக்கு இடையே கறுப்பாக, ஒல்லியாக, தலைமயிர் காடு போல அடர்ந்த பையன் ஒருவன் வந்து நின்றான். என்னையே விரோதமாக பார்த்தான். நண்பர்,

''என்னடா, உனக்கு இங்கு வேலை? போடா''

என்று ரெடுரெடுத்தார். அவன் இடத்தை விட்டு நகரவில்லை. எங்கள் இருவரையும் மாறி மாறி குரோதத்துடன் பார்த்துக்



# குழந்தைக்கும் 'மனநோய்' வருமா?

கொண்டிருந்தான். எனக்கு ஆச்சரியமாகப் போய் விட்டது.

''யாரப்பா இவன்?''

''யாரா! என் பிள்ளை கனிப்பா. என்னமோ புதுசா கேக்கறியே!'' என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. கனியா? எப்போதும் 'துறுதுறு' வென்று ஓடியாடி விளையாடிக் கொண்டிருக்கும் புத்திசாலித் தனமான அந்தக் குழந்தையா இப்படிக் கறுத்து இளைத்துத் துரும்பாகி விட்டான்.

''என்னப்பா, என்னாச்சு இவனுக்கு? ஏதாச்சும் நடுவுலே உடம்பு சரியில்லையா? என்ன இப்படி ஒரேயடியா மாறிட்டான்?''

''என்ன கேடு அவனுக்கு? வெறும் ஹுட்டே பண்றான் சார். அதென்னமோத் தெரியலை. என் வொய்ஃப்போட ரெண்டாவது பிரசவத்துக்கப்புறமா இப்படி மாறிட்டான்...''

'டக்'கென்று எல்லாப் பிரச்னைகளும் வெட்ட வெளிச்சமானது போலிருந்தது எனக்கு. அவர் சொன்ன அத்தனைப் புதிர்களுக்கான காரணங்களும் புரிந்தன

பெரியவர்கள் மிகவும் முக்கியமான விஷயம் பேசிக் கொண்டிருக்கும் போது வேண்டுமென்றே கத்துவானும். அழுது அடம் பிடிப்பானும். திடீர், திடீரென்று 'எனக்கு வயிறு வலிக்கிறது: இங்கே எரியுது. தலையை வலிக்கிறது' என்று அழுது ஆர்ப்பாட்டம் செய்வானும். எல்லோரும் சுவாரஸ்யமாக டி. வி. பார்த்துக் கொண்டிருக்கும் போது திடீரென்று யார் முதுகிலாவது பளாரென்று அடித்து விட்டுப் போய் விடுவானும்.

எவ்வளவோ நல்லதனமாகச் சொல்லியாகி விட்டது. அடித்துப் பார்த்தாகி விட்டது. அம்மாவுக்கு எத்தனைக்கெத்தனை செல்லப் பிள்ளையாக இருந்தானோ அத்தனைக் கத்தனை அடி வாங்குகிறான். அப்படியும் திருந்தும் வழியாகக் காணோம் என்று புலம்பினார்.

இவர்களுடைய அணுகு முறையே எவ்வளவு பெரிய தவறு என்பதை அவர்களுக்கு மெது மெதுவாகப் புரிய வைத்தேன். குழந்தையின் இந்த மாதிரியான நடவடிக்கைக்கு என்ன காரணம்? என்று விளக்கினேன்.

இதுநாள் வரை ஒரே பிள்ளையாக, முதல் பிள்ளையாக வளர்ந்து விட்டிருக்கிறான். எல்லோருடைய கவனமும் இவன் மேலேயே இருந்திருக்கிறது. எதுவானாலும் இவனுக்குத்தான் என்ற உரிமை இருந்தது. ஆனால் அடுத்த குழந்தை பிறந்த போது இவனுடைய சகல உரிமைகளும் பறிபோய் விட்டது போல உணர்ந்திருக்கிறான்.

அப்போது தான் பிறந்த குழந்தை என்பதால் எல்லோரும் குழந்தையின் மேல்

**ஒரு மனநோய் நிபுணர் கூறிய உண்மைக்கதை**

கவனத்தை வைத்திருக்கிறார்கள். கொஞ்சியிருக்கிறார்கள். அதனால் முதல் குழந்தையின் மனம் பாதிக்கப்பட்டு விட்டது. தன்னுடைய உரிமை பறி போய் விட்டது என்று நினைத்துக் கொண்டு, எல்லோருடைய கவனத்தையும் தன் மேல் இருப்ப, என்னென்ன செய்ய வேண்டுமோ அத்தனையையும் செய்திருக்கிறான்.

குழந்தைகளின் இந்த மாதிரியான மனோ நிலையை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இயல்பாகவே சில தாய்மார்களுக்குப் பொறுமையும், சகிப்புத் தன்மையும் உண்டு. எனவே முதல் குழந்தையின் இந்தப் புரட்சியைச் சமாளித்துக் கொண்டு போய் விடுவார்கள். ஆனால் இன்றைய நிலையில் வேலை அவசரம், டென்ஷன் என வரும் போது அத்தனை பொறுமை பெண்களுக்கு இருப்பதில்லை. அவர்களுக்குக் கிடைத்த ஒரே ஆயுதம் 'அடி'தான்.

அந்தக் குழந்தை இதனால் முழுமையாக மனம் உடைந்து போகிறான். தன்னை இவர்கள் புறக்கணித்து விட்டார்கள், தான் இவர்களுக்கு வேண்டாதவனாகி விட்டோம் என்ற 'காம்ப்ளெக்ஸ்' வந்து விடுகிறது. இதனால் கொஞ்சம் கொஞ்சமாகக் குழந்தையின் புத்திசாலித்தனமும், துறுதுறுப்பும் குறைந்து விடுகிறது.

> பாலை புரை ஊற்றி வைக்கும் போது, அதில் கொஞ்சம் அரிசிக் கஞ்சியைக் கலந்து ஊற்றி வைத்தால், தயிர் பெயர்த்து எடுக்கும்படி கெட்டியாக ஆகும்.
>
> கே. பி. பரமேஸ்வரி

போதாததற்கு இந்த நிலையில் வேறொரு தவறையும் சுற்றியுள்ளவர்கள் செய்ய ஆரம்பித்து விடுவார்கள்.

''நீ சொன்ன பேச்சையே கேட்க மாட்டேன் என்கிறாய். சின்ன பாப்பா பார் எவ்வளவு சமர்த்தாக இருக்கிறது!''

தவிர அக்கம்பக்கத்தில் வளர்ந்துவிட்ட குழந்தைகள் படிப்பது, விளையாடுவது போன்றவற்றை ஒப்பிட்டு இவனைத் தாழ்த்த ஆரம்பித்து விடுவார்கள். இதனால் மன அளவில் எழுந்திருக்கவே முடியாத பள்ளத்தில் இவர்களே ஆழ்த்த ஆரம்பித்து விடுகிறார்கள். இந்த மனோநிலையில் அவனை நாம் எப்படிப்பட்டவன் என்று கூறுகிறோமோ அவன் அப்படிப்பட்டவனாக வளர ஆரம்பிக்கிறான்.

குழந்தை ஏதோ கேட்டு நாம் வாங்கிக் கொடுக்காமல் இருந்தால், அது காசைத் தெரியாமல் எடுத்துக் கொண்டு போய் வாங்கி விடுகிறது. சில்லரையை எண்ணிப் பார்க்கும்போது குறைந்தால் பிடித்துக் கொள்கிறோம்.

''ஏண்டா படவா, இந்த வயசிலேயே உனக்குத் திருட்டுப் புத்தியா. நீ எங்கேர்ந்துடா உருப்படப் போறே?''

என்று கத்துகிறோம். 'நீ திருடன்' என்று சொன்னால் அவன் திருடனாகவே வளருகிறான். நீ உருப்படப் போவதில்லை என்றால் அவன் அப்படியே எதற்கும் பயனில்லாதவனாகப் போகிறான்.

''மூத்தது மோளை; இளையது காளை.''

என்று நாம் வழங்கி வரும் ஒரு பழமொழி எப்படி வந்திருக்கும் என்று இப்போது நினைத்துப் பாருங்கள். மூத்தது மோளையல்ல. மோளையாக ஒன்றுக்கும் பயனில்லாத கோழையாக நாம் ஆக்குகிறோம்.

பெரும்பாலான குடும்பங்களில் மூத்த பிள்ளையோ, பெண்ணோ மிகவும் சாதுவாக, எதற்கும் பயப்படக் கூடியவர்களாக, சுமாரான படிப்புடன் உள்ளவர்களாகத் தான் இருப்பார்கள். அதற்குக் காரணம் வளர்ப்பவர்கள் வளர்த்த விதமே தவிர, குழந்தைகள் அல்ல.

குழந்தையை நாம் எப்படி வளர்க்கிறோமோ, அப்படியே தான் குழந்தைகளும் வளருகிறார்கள்.

எனவேதான் சொல்கிறேன். குழந்தைகளைச் சுட்டிக்காட்டும் போது எதிர்மறையாகப் பேசாதீர்கள். 'நீ செய்ய மாட்டாய்' என்று குற்றம் கூறாதீர்கள். தட்டிக் கொடுத்து அன்பாகப் பேசுங்கள்.

''நீ ரொம்பவும் புத்திசாலி. நீ நன்றாகச் செய்வாய்.''

என்று உற்சாகப் படுத்துங்கள். ஏதாவது தவறு செய்து விட்டால்,

''அடேடே என்னோட பாபுவா, இப்படிச் செய்தே? எம்மா, நீ தப்பே செய்ய மாட்டியே! ஏதோ தெரியாம செஞ்சுட்டே இல்லே? இனிமே செய்ய மாட்டியே?''

என்று ஆறுதல் கூறுங்கள்.

எதையுமே நெகடிவாகப் பேசாமல், பாஸிடிவாகக் கூறுங்கள். அந்தக் குழந்தையெனும் பூஞ்செடிக்கு அதுதான் நல்ல உரம்.

'திருடன் மகன் திருடன்' என்பார்கள். அவன் அந்தச் சூழ்நிலையில் வளர்வது மட்டுமே அதற்குக் காரணமில்லை. ''ஐயையோ! இவன் திருட்டுப் புள்ளையாச்சே. அப்பனோட புத்திதான் இவனுக்கும் இருக்கும்'' என்று கூறிக் கூறி அவனையும் திருடனாக நம்முடைய சமுதாயம் மாற்றி விடுகிறது.

தப்பு செய்பவர்களை திருத்துவதற்குச் சந்தர்ப்பமே கொடுப்பதில்லை. மீண்டும், மீண்டும் அவன் செய்த தப்பையே சுட்டிக் காட்டிக் கல்லைத் தூக்கிப் போட்டுப் போட்டு அவன் எழுந்திருக்கவே முடியாமல் செய்து விடுகிறோம்.

எனவே இனிமேலாவது மனிதர்களை, குழந்தைகளை நல்லவர்களாக மாற சந்தர்ப்பம் கொடுங்கள். நம் குழந்தைகள் அனைவருமே புத்திசாலிகளாக, வல்லவர்களாக வளருவதற்கான சூழ்நிலைகளை ஏற்படுத்திக் கொடுங்கள்.



நிர்மலாவின் பேச்சைக் கேட்டுஅதிர்ந்து போய் நிற்கிறாள் சரஸ்வதி.

இவள் சுய நினைவுடன் தான் பேசுகிறாளா. அல்லது விதண்டாவாதமா... என்ற சந்தேகம் மனசிலே அலைபாய அவள் ஏறிட்டு பார்க்கிறாள்.

அந்தக் கடுமையான பார்வையும்அழுத்தமான முகபாவமும் அவள் சொல்வது நூற்றுக்கு நூறு உண்மை என்று நிரூபிக்க...

அதைப் பார்த்ததும் மளமளவென்று கோபம் பொங்குகிறது ''வரலட்சுமி நோன்பு பண்ணை மாட்டியா? உனக்கென்ன பைத்தியமா ..? ஏன் இப்படி அபசகுனமாப் பேசறே .. நானும் நாலு நாழியா கேட்டுண்டு இருக்கேன். நீ இடிச்ச புளியாட்டம் இருக்கே...'' என்று உச்ச ஸ்தாயில் கத்த....

''சரஸ்வதி... நாலு வீட்டுக்குக் கேட்கும் படியா .ஏன் இப்படி கூச்சல்போடறே? இரைர்னு என்ன காட்டுக் கத்தல் இது?'' வாசற்புறத்தில் இருந்த ராமச்சந்திர அய்யர் எரிச்சலுடன் சொல்லிக் கொண்டே உள்ளே வருகிறார்.

முகமெல்லாம் கோபமாய்ச் சுட்டெரிக்கும் பார்வையுடன் சரஸ்வதியும்... எவ்வித சலனமும் இல்லாமல் நிர்மலாவும் நின்று கொண்டிருக்க... ஒன்றையும் புரிந்து கொள்ள முடியாமல் —

''எதுக்கு இ ப் ப டி த் தொண்டை கிழியற மாதிரி கத்தறே?'' என்று அதட்டலுடன் கேட்கிறார்.

''உங்க மாட்டுப் பெண்ணுக்கு புத்தி பேதலிச்சுப் போயிடுச்சு... வரலஷ்மி நோன்பு இங்கு பண்ண மாட்டாளாம். அதனாலே என்னை ஊரி வீட்டுக்குப் போகச் சொல்றா... போன வருஷமே நோன்பு இல்லே... இந்த வருஷமாவது நல்லா பண்ணலாம்னு நெனச்சுண்டு இருந்தேன்... அந்த நெனப்பிலே மண்ணை வாரிப்போடறா... ஒரு சுமங்கலி இப்படி அபசகுனமாப் பேசலாமா?'' எரிச்சலுடன் சரஸ்வதி வார்த்தைகளைப் படபடவென்று பொரிய —

– அவர் நிர்மலாவை ஏறிட்டுப் பார்க்கிறார்.

மாமனார் மாமியாரிடம் மரியாதை. அன்பு... பணிவு... லலிதா ஸஹஸ்ரநாமமும் ஸௌந்தர்ய லஹரியும் அருவியாய்ப் பொழியும் குரல்... நித்திய பூஜைக்கு வேண்டியவைகளைச் சிரத்தையாய் எடுத்து வைப்பது... பளிச்சென்று சிரித்த முகம் ... தீர்க்கமான அறிவு... எதையும் இயல்பாய் ஏற்கும் சுபாவம்...

இவளா... இவளா இப்படிப் பேசி இருப்பாள்? மீண்டும் நம்ப முடியாதவராய் அவளைப் பார்க்க...

அவள் பதில் சொல்லாமல் மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டு நிற்கிறாள்.

''நிர்மலா காரணம் இல்லாமல் அப்படிச் சொல்ல மாட்டாளே?'' குரலில் சந்தேகம் இழையோட மனைவியைப் பார்த்துக் கேட்கிறார்.

''அவ அம்மா செத்துப் போயிட்டதாலே இந்த வருஷம் நோன்பு பண்ண மாட்டாளாம்...'' குத்தலும் கோபமுமாய்ச் சரஸ்வதி சொல்ல—

அதற்கு மேல் அங்கு நின்று கொண்டிருக்க முடியாமல்... இருந்தால் மன அவஸ்தையில் சொற்கள் போர்க்களமாகி விபரீதமாகும் என்ற அச்சத்தில் பரபரவென்று உள்ளே போய்க் கட்டிலில் உட்கார்ந்து கொள்கிறாள்.

'அவ அம்மா செத்துப் போயிட்டதாலே நோன்பு பண்ண மாட்டாளாம்...'

சே... என்ன நிஷ்டூரமான பேச்சு?எல்லோரையும் போலவா அம்மா? சிரித்த முகமும் கனிவுப் பேச்சும்!... அம்மா லக்ஷ்மியின் தோற்றம் எதிரே தோன்ற அதற்கு மேல் தாங்க சக்தியற்றவளாய் — 'அம்மா... அம்மா... என்று துக்கத்துடன் அரற்றுகிறாள்.

சிறு வயதிலேயே அப்பாவை இழந்து விட்ட அவளை வளர்க்க அம்மா ஓடாய் உழைத்தாள். பள்ளியில் பாட்டு டீச்சரான அவள் காலையிலும், மாலையிலும் தனியாய் ட்யூஷன் எடுத்து... சின்ன வயசில் ஏற்படும் அல்ப ஆசைகளுக்கு ஈடுகொடுத்து... நல்ல விதமாய் வளர்க்க வேலைக்காரியாய்.... தோழியாய்த் தன்னையே அர்ப்பணித்து .. அவளைத் தன் சக்திக்கு மீறிய இடத்தில் கல்யாணம் செய்து கொடுத்து...

வாழ்ந்த வாழ்க்கையில் வேலையைத்தவிர வேறு எதையுமே அறியாத அம்மா கான்ஸர் என்னும் கொடிய நோய்க்கு ஆளாகி சித்ரவதைப் பட்டு நான்கு மாதங்களுக்கு முன்பு இறந்து போனாள்...

இன்னும் அம்மாவின் நினைவு சுற்றிச் சுற்றி வருகிறது... அம்மாவை மறக்க முடியவில்லை... மறக்கவும் முடியாது.... அதற்குள் எப்படி நோன்பு பண்ண முடியும்?

## தாய்மார்களுக்கு ஒரு யோசனை

கர்ப்ப காலத்தில் சிலர் மசக்கையினால் மிகவும் அவதிப்படுவார்கள். இதிலிருந்து விடுதலை பெற அச்சமயங்களில் தினமும் முதல் நாள் தண்ணீர் விட்டு வைத்த பழைய சாதத்தின் நீரை உப்புப் போடாது குடித்து வர, நிச்சயமாகப் பலன் கிடைக்கும். உடம்புக்குக் குளிர்ச்சியும் கூட.

—சந்தானலக்ஷ்மி.

முடியாது... முடியவே முடியாது... கண்ணீர் கறை கூட இன்னும் அழியவில்லை....

அப்பொழுது—

''நிர்மலா, உனக்கென்ன பைத்தியமா.. நோன்பு பண்ண முடியாது என்று சொன்னாயாமே .. என்ன திமிர் உனக்கு?'' கோபம் முகத்திலே பரவ அவள் எதிரில் வந்து நிற்கிறான் அவள் கணவன் மூர்த்தி...

அந்தக் கோபத்தில் சிறிதும் பாதிக்கப் படாதவளாய் இருக்க... மாமியாரும் மாமனாரும் சற்றுத் தள்ளி நின்று கொண்டிருக்க...

''ஏய், வாயைத் திறந்து பேசு...'' அவன் மீண்டும் கத்துகிறான்...

''பண்ண முடியாது...'' அழுத்தந்திருத்தமாய் அவள் சொல்கிறாள்.

''பார்த்தாயா! எத்தனை தைரியமாய் சொல்கிறாள்?'' என்று தூண்டிய குரலில் சொல்லி —''என்னை ஹரி வீட்டுக்குப் போகச் சொல்றுடா...'' இதற்காகவே காத்திருந்த சரஸ்வதி மளமளவென்று சொல்ல....

''போனால் என்ன? அவரும் உங்க பிள்ளை தானே?'' என்று வெடுக்கென்று நிர்மலா திருப்பிக் கேட்கிறாள்.

''ஏம்மா இப்படிப் பிடிவாதம் பண்றே... உனக்குத் தெரியாதது ஒண்ணுமில்லே.... நோன்பு பண்ணாமே இருக்கக் கூடாது.... சுமங்கலித்தனம் என்னிக்குமே நீடிச்சு இருக்கணும் என்பதற்காக பண்றது ... இப்படி அபசகுனமா சொல்லாதே...'' என்றுமில்லாமல் பிடிவாதமாய்ச் சொல்லும் நிர்மலாவைப் பார்த்து இனிய குரலில் சொல்கிறார் மாமனார்.

ஒருநாள் கூட இப்படி எதிர்வாதம் செய்யாத மனைவி இன்று இப்படிப் பேசுவதைப் பார்த்து அதிர்ந்து போய் அவள் தோளை மெதுவாக உலுக்குகிறான்.

''ஏன் இப்படிப் பேசறே?'' என்று நிதானத்தை வரவழைத்துக் கொண்டு கேட்கிறான்.

''போன வருஷம் உங்கப்பாவிற்கு பங்காளி செத்துப் போயிட்டதாலே ... வருஷம் முழுவதும் பண்டிகை இடையாது என்று சொன்னப்போ... அந்த முகம் தெரியாத பங்காளிக்காக நாம பண்டிகை பண்ணலே... ஆனா இப்போ... என்னை வளர்த்து ஆளாக்கி நல்ல இடத்திலே கல்யாணம் செஞ்சு கொடுத்த அம்மா செத்துப் போயி இன்னும் நாலு மாசம் கூட ஆகலே... என்னாலே எப்படி நோன்பு பண்ண முடியும்?

சாஸ்திரம்... சம்பிரதாயம் இவைகளில் எல்லாம் நியாயமாக இருக்கலாம்... ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் ஆனவுடன் எல்லாமே கணவன் தான்... தான் பிறந்த கோத்திரத்திற்கே அந்நியமாகி விடுகிறாள். என்பதும் உண்மையாக இருக்கலாம்.. ஆனால் எனக்கு?

கழுத்தில் தாலி ஏறி விட்டதாலே அம்மா உறவு அற்று விடவில்லை... என் அம்மாவை மறந்து என்னால் நோன்பு பண்ண முடியாது. பண்ண மாட்டேன்... என் மனசு தான் முக்கியம்... கணவனுக்கு ஒரு வழி... மனைவிக்கு ஒரு வழியா?

இது என்ன நியாயம்? நீங்களே சொல்லுங்க?'' என்று வெறிபிடித்தவள் போல் கத்தி நிறுத்தினாள்.

அவன் பதிலே சொல்லாமல் திகைத்துப் போய் நிற்க —

சரஸ்வதி அவளையே வெறித்தவாறு பார்க்க...

'அம்மா நிர்மலா... உன் உணர்ச்சிகளை நான் மதிக்கிறேன்... நோன்பு பண்ணலாமா கூடாதா? என்ற ஆராய்ச்சி வேணும்... பெத்த தாயை விட சிறந்த தெய்வம் எதுவும் இல்லே. இது உண்மை தான்... இதைப் புரிஞ்சுக்காமே இந்தச் சில நிமிஷங்களிலே உன்னைத் தப்பா எடை போட்டுட்டேன். நான் சரஸ்வதியை அழைச்சுண்டு ஹரி வீட்டுக்குப் போகிறேன் '' என்றார் மாமனார் கனிவாக.

# நாளெல்லாம் நறுமணம்
# சுகந்தியின் சந்தனமணம்

# சுகந்தி

சாண்டல் டால்கம் பவுடர் &
சாண்டல்வுட் ஃபேஸ் பவுடர்

**இது
ஒரு தூய
சந்தனக்கலவை**




**தயாரிப்பாளர்கள்: ஜே.டி.எஸ். கெமிகல்ஸ்
சென்னை-600 021**

LOOK'S 8

'இதற்கு என்ன செய்வது?' கேள்வி— பதில் வந்து கொண்டிருந்த போது தினமும் வாசகர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் வந்து கொண்டிருந்தன. பல கடிதங்கள் ஒரே விஷயத்தைப் பற்றிக் கேட்பதாக இருக்கும். சமுதாயத்தில் நலிந்துள்ள வரதட்சிணைக் கொடுமை, இருதார மணம், சொத்துத் தகராறு என்பதைப் பற்றிய பல்வேறுவிதமான கேள்விகள் வரும். எனவே இதைப் போன்ற பொதுவான விஷயங்களை ஒருவருக்கு மட்டுமே பதிலளிப்பதாக இல்லாமல் எல்லோருக்குமே உபயோகப் படுவதாக இருக்க வேண்டும் எனக் கட்டுரை வடிவில் தருகிறோம்.

இத்தொடரில் சட்டத்தில் என்ன இருக்கிறது என்பதைப் பற்றி மட்டுமே கூறாமல், சில திருத்தங்களையும் கொண்டு வரலாம் எனச் சட்ட வல்லுநர்கள் ஆலோசனை கூறுகின்றனர். பெண்களின் நலனுக்காகப் போராடும் மாதர் சங்கங்கள் போன்றவை இவர்களின் ஆலோசனைகளைக் கேட்கலாம்.

# மனைவி இருக்க, இரண்டாம் மணமா?

திருமணத்தோடு இத்தொடரை ஆரம்பிக்கலாம். ஏனெனில் திருமணத் திற்குப் பிறகோ அல்லது திருமணச் சம்பந்தமாகவோதான் ஆண் பெண் ணிடையே பிரச்னைகள் எழுகின்றன.

ஏராளமான பெண்கள் தனக்குத் திருமணம் நடந்ததைப் பற்றியும், கணவன் தன்னை ஏமாற்றி இரண் டாம் மனைவியாக ஆக்கிக் கொண் டதைப் பற்றியும், தான் இப்போது நிர்க்கதியாக நிற்பதைப் பற்றியும் எழுதியிருந்தார்கள்.

முதலாவதாக, 'இரண்டாவது மனைவி' என்ற சொல்லுக்கே சட்டத் தில் இடமில்லை. மனைவியோ, கண வனோ, உயிரோடு இருக்கும் வரை இரண்டாவதாக ஒருவனோ, ஒருத் தியோ திருமணம் செய்து கொள்வ தென்பது முடியவே முடியாத காரி யம். இதைப் பற்றி 'ஹிந்துச் சட்டம்' என்ன கூறுகிறது என்று பார்க்க லாம்.

இந்துத் திருமணத்தைப் பொறுத்த வரை திருமணம் என்பது ஒரு ஒப்பந் தம் (Contrect) கிடையாது. ஒப்பந் தம் என வந்து விட்டால் 'நீ இது கொடுத்தால், இதை நான் கொடுப் பேன்' என பேரம் பேசுவதாக ஆகும். ஆனால் இந்துத் திருமணங்களோ 'அன்பால் இணையும் இரண்டு உள்ளங் களின் சங்கமம்' எனக் கவிஞர்கள் கூறுவார்களே அதைப் போன்றது தான்.

எனவே தான் சட்டங்கள் இயற்றும் போதும் பழக்கமாக, பரம்பரையாக வந்த சடங்குகளையும், சம்பிரதாயங் களையும் கருத்தில் கொண்டு திருமணச் சட்டத்தை இயற்றி இருக்கிறார்கள்.

## திருமணத்திற்கு என்ன கண்டிஷன்?

1. திருமணம் செய்து கொள்ளும் ஆணிற்கு இருபத்தொரு வயதும், பெண்ணிற்கு பதினெட்டு வயதும் நிறைந்திருக்க வேண்டும்.



2. மணம் செய்து கொள்ளும் இருவரும் புத்திசுவாதீனத்துடன், முழுமையான சுய உணர்வுடன், அறிவு தெளிந்தவர்களாக இருக்கவேண்டும்.

3. காக்காய் வலிப்பு போன்ற கடுமையான நோயால் (மண வாழ்க்கைக்கு லாயக்கில்லாத நோயால்) பாதிக்கப்பட்டவர்களாக இருக்கக் கூடாது.

4. திருமணம் செய்து கொள்ளும் ஒருவனுக்கும், ஒருத்திக்கும் கணவனோ, மனைவியோ உயிருடன் இருத்தல் கூடாது.

5. பாரம்பரியமாக வந்த உறவினர்களுக்கு இடையே தவிர, தடை செய்யப்பட்ட உறவுகளுக்கிடையே திருமணம் நடத்தல் கூடாது.

திருமணச் சட்டத்தின் முன் ஆணும் பெண்ணும் சமமாகவே கருதப்படுகிறார்கள். திருமணச் சட்டப்படி ஆண் தவறு செய்தாலும், பெண் தவறு செய்தாலும் தண்டனைக்கு உள்ளாகிறார்கள். நம்முடைய சம்பிரதாயங்களில் கூட ஆணும், பெண்



ணும் சமமாகவே கருதப்பட்டிருக்கிறார்கள். புரோகிதர்களுக்குத் தட்சணை கொடுப்பது போன்றவற்றில் ஆண் பணம் வைக்க, அதில் தீர்த்தம் விட்டு மனைவி அதை அனுமதிக்கிறாள்.

கணவனோ, மனைவியோ உயிரோடு இருக்கும்போது மற்றவர் திருமணம் செய்யக்கூடாது என்பதைப் பார்த்தோம். இதன் மூலம் இருதார மணம்தான் தடை செய்யப்படுகிறதே தவிர, விதவை மணமோ, விவாகரத்திற்குப் பின் நடக்கும் மணமோ, தடை செய்யப்படவில்லை.

## சினிமாக் கணவன்!

நம்முடைய திரைப்படங்களில் ஒன்றை நீங்கள் கவனித்திருக்கலாம். கொடுமைக்காரக் கணவன், மனைவியைத் தன் இரண்டாம் திருமணத்திற்குச் சம்மதிக்கும்படி வற்புறுத்துவான், ஒரு பத்திரத்தைத் தயார் செய்து, அதில் கையெழுத்துப் போடும்படி அடிப்பான். பிறகு அதை வாங்கிக் கொண்டு போய்,

''பார்த்தாயா, நம் திருமணத்திற்கு என் மனைவி சம்மதித்துக் கையெழுத்துப் போட்டுவிட்டாள். இனி நாம் 'ஜாம், ஜாம்'னு கல்யாணம் செய்துப்போம்' என்பான்.

ஆனால் இது உண்மையல்ல. கட்டுரை ஆரம்பத்திலேயே சொன்னது போல இந்து, கிறிஸ்துவ, பார்ஸிய திருமணச் சட்டப்படி 'இரண்டாம் மனைவி', 'இரண்டாம் கணவன்' என்ற சொல்லுக்கே இடமில்லை. ஒன்று—

மனைவியோ, கணவனோ இறந்திருத்தல் வேண்டும்.

இல்லையென்றால்,

நீதிமன்றத்தில் முறையான விவாகரத்துப் பெற்றிருக்கவேண்டும்.

சம்மதித்துக் கையெழுத்துப் போடுவதோ, இரண்டாம் மனைவியாகத் திருமணம் செய்து கொள்வதோ சட்டப்படி செல்லாது.

## ஏமாந்து போகும் பெற்றோர்கள்...

கிராமங்களில் இது நிறைய நடக்கிறது. அதாவது சொத்து நிறைய உள்ளவன் என்பதற்காக அவனுக்குத் தன் பெண்ணை (முதல் மனைவி இருக்க) இரண்டாம் மனைவியாக்கி விடுவார்கள் 'அவனுக்குத் தான் சொத்து நிறைய இருக்கே, இவளுக்கும் அதுல பங்கு வந்துட்டுப் போவுது' என்பார்கள். ஆனால்...

இந்தப் பெண்ணிற்குச் சட்டப்படி அவனுடைய சொத்தில் ஒரு பைசா கூட வராது. ஏனெனில் இவள்தான் அவனுக்கு மனைவியே இல்லையே! முதல் மனைவி இருக்கும் போது, என்னதான் சாஸ்திர சம்பிரதாயப்படி இவளை அவன் திருமணம் செய்து கொண்டிருந்தாலும் அந்தத் திருமணம் சட்டப்படி ஒப்புக் கொள்ளக் கூடியத் திருமணமில்லை. எனவே நாளைக்குத் தகராறு என வரும்போது இவளுக்குச் சொத்தில் பங்கோ, ஜீவனாம்சமோ கிடைக்காது.

இந்த இடத்தில் பெண்ணுரிமைச் சங்கங்களுக்கு ஒன்றைக் கூற விரும்புகிறோம்.

மே '84

சட்டரீதி இல்லாத கட்டடம் கட்டும்போதோ, வேறேதேனும் செயலைச் செய்யும்போதோ, கோர்ட்டிற்கு சென்று தடையுத்தரவு வாங்க முடிகிறது. ஆனால் தன் கணவன் இரண்டாம் திருமணம் செய்து கொள்ளப் போகிறான் என்பது தெரிந்தால் முதல் மனைவி 'தடையுத்தரவு' வாங்க முடியாது. அவன் இரண்டாம் திருமணம் செய்து கொண்ட பிறகே, அதைச் சாட்சிகளுடன் நிரூபித்த பிறகே இவளுக்குரிய நியாயங்களோ, கணவனுக்குத் தண்டனையோ வழங்க முடியும்.

இந்த நிலைமையிலுள்ள சட்டத்தில் தடையுத்தரவு ஒன்றைக் கொண்டுவர இவர்கள் ஆலோசனை கூறலாம்.

## கோவிலில் தாலி கட்டி மனைவியாக்குவேன்...'

இன்றைய பெண்கள் எவ்வளவோ படித்திருந்தாலும், விஷய ஞானம் தெரிந்தவர்களாக இருந்தாலும் உணர்ச்சி வசப்படும்போது ஏமாந்து விடுகிறார்கள். அதுவும்காதல் என்று வந்து விட்டால் தன் காதலன் தன்னை எந்த விதத்திலும் ஏமாற்ற மாட்டான் என்று சத்தியமே செய்கிறார்கள். நல்லவர்கள் வாழ்க! ஆனால் நம்பிக்கைத் துரோகம் செய்பவர்கள்.? நாம் இப்படிப்பட்டவர்களுடையசெய்திகளைத்தானே அன்றாடம் செய்திப் பத்திரிகைகளில் படிக்கிறோம்.

முதலில் மணம் செய்து கொள்ளும் பெண்ணோ, அல்லது பெண்ணின் பெற்றோர்களோ திருமணத்திற்குச் சாட்சிகளை வைத்துக் கொள்வது மிகவும் அவசியம். சாஸ்திரப்படியோ அல்லது பதிவு அலுவலகத்திலோ, அல்லது சாட்சிகளுடன் கோவிலிலோதான் திருமணம் செய்யவேண்டும்.

'கடவுள் சாட்சியாக உனக்குத் தாலி கட்டி விட்டேன்' என்று கோயிலில் மஞ்சள் கயிற்றைக் கட்டிவிடும் கதாநாயகனைப் படத்தில் பார்க்கிறோம். ஆனால் கடவுள் வந்து நீதிமன்றத்தில் சாட்சி சொல்வது என்பது கஷ்டம். எனவே கோவிலிலேயானாலும் இரண்டு பேர் சாட்சியுடன் திருமணம் செய்து கொள்வது நல்லது.

எதற்கு இவற்றைக் கூறுகிறோம் என்றால், பிற்காலத்தில் திருமண உறவில் ஏதேனும் தகராறுகள் வரும்போது, திருமணமே நடக்கவில்லை என வெகு எளிதில் குற்றவாளிகள் தப்பித்துக் கொண்டு போய் விட வாய்ப்புண்டு. இதனால் பெண்களின்வாழ்க்கை சமூக, பொருளாதார ரீதியாக அடிபட்டுப் போய் வறுமையிலும், அவமானத்திலும் உழல வேண்டியவர்களாகிறார்கள்.

## சட்டப்புறம்பான திருமணத்திற்குத் தண்டனைகள்

சிவில் சட்டத்தில் செக்ஷன் 5—ன் படி கணவனோ மனைவியோ உயிருடன் இருக்கும்போது இரண்டாம் திருமணம் என்பது செல்லாதது. அவர்கள் சொத்தின் வாரிசுதாரர்களாகக் கருதப்பட மாட்டார்கள்.

ஆனால் கிரிமினல் சட்டத்தில் இப்படி கடுமையான தண்டனைகள் உண்டு. இ. பி. கோ. 493, 494, 495 இவை சிறைத் தண்டனையை அளிக்கின்றன. இ. பி. கோ. 493 கூறுவது —

1. சாட்சி, சடங்குகள் அல்லது அங்கீகரிக்கப்பட்ட நடைமுறைகள் அல்லாமல் திருமணம் செய்து கொண்டு தன்னை ஏமாற்றித் தன் வாழ்க்கையை பாழடித்து விட்டதாக ஒருவர் மற்றவர் மீது வழக்குத் தொடருகிறார் என்று வைத்துக் கொள்வோம். முதலாமவர் அதை நிரூபித்து விட்டால் ஏமாற்றியவருக்குப் பத்தாண்டுகள் வரை சிறைத் தண்டனை உண்டு.

இ. பி. கோ. 494 கூறுவது—

2. கணவனோ, மனைவியோ உயிருடன் இருக்கும்போது, மற்றவர் இன்னொரு திருமணம் செய்து கொண்டால், அத்திருமணம் கோர்ட்டில் நிரூபிக்கப்பட்டால் அவருக்கு ஏழாண்டுகள் சிறைத் தண்டனையோ, அபராதத்துடன் கூடிய சிறைத் தண்டனையோ வழங்கப்படும்.

இன்றைக்கும் ஏராளமான 'இரண்டாம் திருமணங்கள்' நடந்து கொண்டுதான் இருக்கின்றன. கல்விரீதியாக முன்னேறியபெண்கள் இதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். எந்த விதத்திலும் உரிமையில்லாத இப்படிப்பட்ட திருமணங்களைத் தவிர்ப்பது நல்லது.

# டாபர் ஆம்லா கூந்தல் தைலம் அதன் அழகான புதிய தோற்றத்தை காட்டுகிறது !




**ஆனால் அதன் பழைய நீண்ட, கரிய பட்டுப் போன்ற கூந்தல் ரகசியம் மாறவில்லை.**

நீங்கள் பல ஆண்டுகளாக பயன்படுத்தி வந்த அதே டாபர் ஆம்லா கூந்தல் தைலம் இப்போது புதிய பாக்கில் உங்களுக்குக் கிடைக்கிறது. குளிர்ச்சியான, ஊட்டமுள்ள மென்மையான நறுமணமுடையது. டாபர் ஆம்லா கூந்தல் தைலம் உங்கள் கூந்தலை பாதுகாத்து அதன் இயற்கை அழகைக் கூட்டுகிறது.

தொன்றுதொட்டு இருந்து வரும் ரகசியத்தை ஏராளமான பெண்மணிகள் 50 ஆண்டுகளுக்கும் அதிகமாக பகிர்ந்து வருகிறார்கள்.

**டாபர்**

டாபர் ஆம்லா கூந்தல் தைலம்
நீண்ட கூந்தலுக்கு அன்றாடப் பாதுகாப்பு

மே '84

# குலக் கொழுந்து



சியாமளா ராவ்

கொல்லைப்பக்கம் கையில் ஒரு சொம்புடன் ஓரமாய் நின்றிருந்த வித்யாவைப் பார்க்கப் பார்க்கப் பற்றி எரிந்தது மீனும்பாவுக்கு. ஆங்காரத்தில் வார்த்தைகள்சோளப் பொரியாய்ப் பொரிந்தன.

''ம்... வந்தாச்சா? ஆச்சு அஞ்சு வருஷம். அமாவாசை, பௌர்ணமி கூட ஒரு நாள் தள்ளி வரும். உனக்கு அதுகூட கிடையாதே. இருபத்தஞ்சு நாளானுலே நீயாவே போய் மூலையிலே உக்காந்துடுவாமே. அப்பேர்ப்பட்ட தவளுத கணக்காச்சே. பேரன், பேத்திகளைக் கொஞ்சவும் கொடுத்து வச்சிருக்க வேண்டாமா? அழகு, அழகுன்னு அடம் புடிச்சு பண்ணிண்டான். துணி சுத்தின பொம்மையா, அந்த அழகும் தான் மலட்டு தடிப்பு தடிக்க ஆரம்பிச்சிடுத்தே.''

''என்னோட தலைவிதி. அவர் சின்ன வயசுலே போகாம இருந்தா, நாலாவது நானும் பெத்துத் தள்ளியிருப்பேன். ஒண்ணுசாவியா போனலும், இன்னொண்ணு முளைக்குமே. எதுக்கும் வழியில்லாம பகவான் இப்படியா சோதனை செய்யணும்...?''

இன்னும் தன் வாயிலிருந்து புறப்பட்ட நெருப்புக் கங்குகளை வித்யாவை நோக்கி வீசி எறிந்தாள் மீனும்பா.

மாமியாரின் ஏச்சுக்களை ஜீரணிக்க முடியாமல் கண்கள் சிவந்ததும், மனம் நொறுங்கியதும் தான் மிச்சம். வேறு வழி?

இன்னும் நான்கு தங்கைகள் வளர்ந்து வழி கேட்டு நிற்கிற பெற்றோரிடம், கிடைத்த பாதையை விட்டுவிட்டு, அவர்களுக்கு மேலும் ஒரு கேள்விக்குறியாக தானும் நிற்க விருப்பமில்லை.

உண்மையைக் கூறித் தான் தப்பிக்க ஐந்து நிமிடமாகாது.. ஆனல், அதனல் ஏற்படும் பின் விளைவுகளும், பூகம்பங்களும், முக்கியமாகக் கணவனின் கெஞ்சும் முகமும்..

கண்களில் நீர் வடிய இடித்த புளியாய் உட்கார்ந்திருந்தாள் வித்யா.

மௌனமாய்ப் படுக்கையில் வந்து, ஒதுங்கிப் படுக்கும் வித்யாவைப் பார்க்கப் பாவமாயிருந்தது ராஜுவிற்கு. மூன்று நாட்களும், மூன்று கண்டங்களாய்க் கழித்து விட்டு, இன்று உள்ளே வந்திருந்தாள் வித்யா. மாதாமாதம் வித்யா படும் பாட்டை ராஜுவினல் தாள முடியவில்லை.

''வித்யா.''

''உம்.''

''நா எத்தனை நாளா சொல்லிண்டிருக்கேன். நீதான் ஒத்துக்க மாட்டேங்கறே. ப்ளீஸ் வித்யா? நானே முழு மனசோட சொல்றச்சே, நீ ஏன் தயங்கறே?''

''ஒரு புழு, பூச்சிக்குக் கூடத் தெரியாம இந்தக் காரியம் நடக்கும். அதுக்கு நான் பொறுப்பு வித்யா. இப்படி அம்மா கிட்டே பேச்சு வாங்கறதுக்கு, இது எத்தனையோ மேல் வித்யா.''

ராஜு மறுபடியும் ஒரு மாதமாக அவளிடம் கூறியதையே கூறித் தொந்திரவு செய்தான். எதற்குப் பதில் கூறுமல் மரக்கட்டையாய்ப் படுத்திருந்தாள் வித்யா.

காலில் ஷூ அணிந்து கொண்டு, அதன் லேஸை இறுக்கி முடிச்சிட்டவன், அருகில் வித்யா நிற்கவும் ஏறிட்டுப்பார்த்தான்.

டிபன் பாக்ஸை அவனிடம் கொடுத்தவள், தலைகுனிந்து நின்றுள். கண்களிலிருந்து வழிந்த நீர், மூக்கு நுனியில் புல்லாக்குப் போல், கீழே விழத் துடித்து நின்றது.

பதறிப் போன ராஜு, ''என்ன வித்யா? ஏன் அழறே? மறுபடியும் அம்மா ஏதாவது சொன்னுளா?'' என்று அவள் கண்ணீரைத் துடைத்தபடியே ஆதுரத்துடன் கேட்டான்.

''உங்க இஷ்டத்துக்கு . நடந்துக்கறதா தீர்மானிச்சுட்டேங்க.'' என்று தழுதழுத்த குரலில் கூறியவள், ஒரு விநாடியும் அவனெதிரில் நிற்காமல் உள்ளே ஓடிவிட்டாள்.

''வித்யா... வித்யா... யூ ஆர் கிரேட் வித்யா.'' என்று உணர்ச்சி வசப்பட்டுக்கூறியவன், சிறிது நேரம் மௌனமாக நின்றுன். சிந்தனையின் தீவிரம், நெற்றியில் கோடுகளாகவும், முடிச்சுக்களாகவும் தோன்றி மறைந்தன. மேற்கொண்டு நடக்க வேண்டியவைகளைக் கவனிக்கச் செயல்படலானுன்.

பின்னையும், மருமகனும் வெளியூர் புறப்படத் தயாராகப் பெட்டி படுக்கையுடன் வந்ததும், மீனும்பா ஆச்சரியத்துடன்,

''என்னடா, ரெண்டு பேரும் பெட்டியும், படுக்கையுமா புறப்பட்டுட்டீங்க? க்ஷேத்ராடனமா?'' கிண்டலாகக் கேட்டாள்.

வார்த்தைகள் 'கணீர்' எனச் சவுக்கடியாகப் பட்டாலும், ''இல்லேம்மா, டாக்டர் 'ஹில் ஸ்டேஷனுக்கு'ப் போய் கொஞ்சநாள் இருந்துட்டு வாங்கோ. இடமாறுதல் கூட மனமாறுதலாகி, ஏதாவது பலன் இருக்கலாம்னார். அதையும் பார்த்துடலாமேன்னு...''

தடுமாறியபடி கூறினான் ராஜூ. வாய் திறக்கவில்லை வித்யா.

''ஹில் ஸ்டேஷனோ, மில் ஸ்டேஷனோ, எனக்குத் தெரியாது. ஆனா மறுபடியும் 'தில்'லாக வந்து நிக்காதேங்கோ. என்னாலே பொறுத்துக்க முடியாது. ஆமாம்'' என்றாள் கண்டிப்புடன் மீனாம்பா.

'சே இவளும் ஒரு பெண்ணா? நம்ப அம்மான்னு சொல்லிக்கவே வெக்கமாயிருக்கு. பெண்ணுக்குப் பெண்ணேதான் எதிரி.'

மனதினுள் வெதும்பியபடி டாக்ஸியில் சாமான்களை ஏற்றினான் ராஜூ.

''ஊவ்வே...'' என்ற சப்தம் கிணற்றடியில் எழுந்ததும், மீனாம்பாவுக்கு ஒரு நிமிடம் ஒன்றும் புரியத்தான் இல்லை. மனதில் எழுந்த சந்தேகம் தீர கிணற்றடிக்கு சென்றாள். ஒக்காளித்து, ஒக்காளித்து வாந்தியெடுக்கும் வித்யாவைப் பார்த்து, அதிர்ச்சியில் உறைந்து நின்றாள்.

'பகவானே என்னோட குறை உன் காதுக்கு எட்டிடுத்தா? நானும் எல்லோரையும் போலப் பேரக் குழந்தையை கொஞ்சப் போறேனா? எனக்கும் அந்த அதிர்ஷ்டம் உண்டா?'

'இத்தனை நாளும் இந்தப் பொண்ணை என்ன பாடு படுத்தியிருப்பேன்? எத்தனைக் கேவலமாய் வாயாலே அவளை அடிச்சிருப்பேன்? என்னை மன்னிச்சிடுடாப்பா.... ஈஸ்வரா...

இனிமே இவளைக் கீழே பாதம் பட விடுவேனா? குனிஞ்சு வேலை செய்யச் சொல்வேனா? கண்லே வச்சுக் காப்பாத்தி, இத்தனை நாட்கள் படுத்தியதுக்கும் சேர்த்து பிராயச்சித்தம் செய்ய மாட்டேனா?'

சிந்தனையை வளர விடாமல் நிறுத்தி வித்யாவிடம் பரபரப்புடன் ஓடி வந்தான்,

''வித்யாம்மா, என்னடி செய்யறது? என் மேலே சாஞ்சிக்கோ. இப்போ அப்படித்



தான் இருக்கும். கொஞ்சம் பொறுத்துக் கோம்மா. என்னைப் புடிச்சின்டு மெதுவா எழுந்திரு. நிதானமாப் படுக்கையிலக் கொண்டு விட்டுடறேன். ரெஸ்ட் எடுத்துக்கோ. க்ளுகோஸ் போட்டுக் கொஞ்சம் ஆரஞ்சு ரசம் பிழிஞ்சு தர்றேன். குடிடி தங்கம். கொஞ்ச நாள் அப்படித்தான் படுத்தும். இதுக்குத்தானேடி இவ்வளவு நாள் காத்திருந்தது? சந்தோஷமாயிரு. ராஜூ கிட்டக்க வேணுங்கறதைக் கேளு. எங்கிட்டேயும் கூச்சப்படாம வாய்க்கு வேணும்கிறத சொல்லு. செஞ்சு தர்றேன். வா! மெதுவா... வா''

தன் தோள்களில் வித்யாவை சாய்த்துக் கொண்டு, அவளை அணைத்துக் கொண்டு வந்து படுக்கையில் விட்டாள்.



எலுமிச்சம்பழம் ரசம் வைத்து கடுகு தாளித்து, கருவேப்பிலை கொத்துமல்லி போட்டு, சிறிது இஞ்சியையும் தட்டிப் போட்டு விட்டால் ரசம் மிகவும் அருமையாக இருக்கும். இஞ்சிச் சாறு உடம்புக்கு நல்லது. அந்த இஞ்சியை விலக்காமல் நாம் தயிர் சாதத்துக்கு ஊறுகாய் போலத் தொட்டுக் கொண்டு சாப்பிட்டு விடலாம். நன்கு ரசத்தில் உள்ள புளி, உப்பு, ஊறி இருக்கும்.

—புஷ்பா.

மனம் பொங்கியது வித்யாவிற்கு.

பாவம் இந்த என் நிலைக்காக இந்த வயதான மனம் தான் எவ்வளவு துடித்திருக்கிறது? நல்லவளான இவளை, என்னமாய் கொடுமைக்காரியாய் மாற்றியிருந்தது. இப்போது...

மெல்ல அசதியுடன் கண்களை மூடினாள் வித்யா.

நாட்கள் நகரவில்லை. பறந்தது. மீனும்பா, வித்யாவை அவ்வளவு ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொண்டாள். கனிவுடன் உபசரித்தாள். வாய்க்கு வேண்டியது கேட்டு,கேட்டு அன்புடன் செய்து தந்தாள். வாந்தி எடுத்த அசிங்கங்களை, முகம் சுளிக்காமல் சுத்தம் செய்தாள்.

தாய்மையின் பூரிப்பு. நாள் ஆக ஆக வித்யாவின் உடலில் அழகைக் கூட்டி மெருகூட்டச் செய்திருந்தாலும், வித்யாவின் சந்தோஷம் பூரணமாக இல்லை. ஒரு போலி மகிழ்ச்சிதான் தாண்டவமாடியது. அடிக்கடி மௌனத்தில் மூழ்கி, வெற்றுப் பார்வையுடன் அமர்ந்து விடுவாள் வித்யா.

அந்த நாளும் வந்தது. வலியின் தீவிரம் அதிகமாக இந்த ஒன்பது மாதங்களும் மௌனத்தில் குமுறிய வித்யா, எல்லாவற்றிற்குமாக, இந்த வலியைச் சாக்குவைத்துப் பெரியதாக வாய் திறந்து கூக்குரலிட்டாள்.

அவளுடைய மன உளைச்சல்களையும், கூக்குரலையும் தாங்க முடியாமல் வெளியே வந்த அந்தக் குழந்தையும் வீறிட்டுக் கத்த ஆரம்பித்தது.

**மீ**னும்பா கோவிலுக்குப் போயிருந்தாள். கண்கள் பாதி சொருகிய நிலையில் வித்யாவைப் பார்த்த ராஜூ பதறிப் போனான். தன் தோளில் சாய்த்தபடி, ''வித்யா... வித்யா என்னம்மா இது? என்னாச்சு?'' என்று பதைத்து, அவளின் இரண்டு கன்னங்களிலும் படபடவெனத் தட்டி நினைவை முழுமையாக ஏற்படுத்த முயன்றான்.

குமுறியபடியே, ''என்னை விட்டுட்டு எங்கேயும் போகாதீங்க. நான்... பொழைக்க விரும்பலே. பீரோவுல ஷெல்ப்ல ஒரு லெட்டர் வச்சிருக்கேன். அப்புறமா படிங்க.'' ராஜூவின் கையைத் துவளும் கைகளால் பிடித்துக் கொண்டே கூறினாள்.

இக்கித் திணறி, அரைகுறை வார்த்தையாய்ப் பேசிய வித்யா, ஐந்தே நிமிடத்தில் துவண்டு, சரிந்து ராஜூவின் மடியில் விழுந்து கண்களை மூடினாள்.

விழிகள் இமைக்கவும் மறந்து குத்திட்டு நிற்க, மூடிய இமைகளுடன் மடியில் துவண்டு கிடக்கும் வித்யாவுடன், அழும் குழந்தையின் குரல் கூட காதில் விழாமல், உறைந்து உட்கார்ந்திருக்கும் மகனை, கோவிலிலிருந்து வந்த மீனும்பா பார்த்து, அலறிய அலறலில் கூட்டம் கூடியது.

தோளில் உறங்கும் குழந்தையும், மனத்தின் துக்கம் முழுவதும் கண்களின் வாயிலாக சோக மழையாகப் பொழிய, ஒழுங்கற்ற தாடியும், மீசையுமாய் உலவிக் கொண்டிருந்த ராஜூவிற்குப் பளிரென மின்னலடித்தாற் போல, வித்யா கடைசியாகக் கூறிய கடிதத்தைப் பற்றிய நினைவு வந்தது. குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி விட்டு, பாய்ந்து ஓடி பீரோவைத் திறந்தான். ஷெல்பில் ஒரு பக்கமாக மடித்து வைத்திருக்கும் கடிதத்தை எடுத்துக் கொண்டு, தன் அறையின் கதவைச் சாத்திக் கொண்டு படிக்க ஆரம்பித்தான்.

என் பிரியமுள்ளவருக்கு,

உங்களுக்கு இந்தக் கடிதம் எதிர்பாராத **ஒன்று**. **ஆ**னால் எனக்கோ?

## நீங்கள்...
## தரமான பொருளைப் பெற அதிகமாக செலவு செய்கிறீர்களா?
## அல்லது மட்டமான பொருளே போதும் என்று இருந்து விடுறீர்களா?

# பிஜ் கொண்டு அதை மதிப்பிடுங்கள்

**விலையிலே**

பிஜ், சிறந்த முறையில் சிக்கனம் மற்றும் தரம் இரண்டையும் பிணைக்கிறது. உண்மையில், பிஜ் அளிக்கும் சிக்கனம் இருதரப்பட்டது. இதோ கண்டுகொள்வீர்—இதர நன்கறிந்த துலக்கும் பவுடர்களைவிட பிஜ் 25% குறைந்த விலை கொண்டது. அத்துடன், மட்டமான துலக்கும் பவுடர்களைவிடக் குறைந்த அளவே பிஜ் போதும் மாசற்ற பளபளப்பு வீசுவதற்கு.




**செயல்திறனிலே**

எவர்சில்வர் பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள், வாஷ் பேஸின்கள், எவற்றிலிருந்தும் ஸுப்பர் பிஜ், கறைகள், கசடு, பிசுக்கு இவற்றை தீவிரச் செயல் புரிந்து நீக்கி விடுகிறது. விரைவில் நுரைவளம் பெருகும் திறனுள் நாசுக்கான பாகங்களையும் சொரசொரப்பான பாகங்களையும் மேன்மையாகவும், எளிதாகவும் சுத்தம் செய்கிறது. பல-வித உபயோக பிஜ் இருக்கையிலே வெவ்வேறு துலக்கும் தேவைகளுக்கு விலை அதிகம் கொடுத்து வெவ்வேறு பவுடர்கள் வாங்குவானேன்? உயர்ந்த சேமிப்பு மற்றும் உயர்ந்த செயல்திறன்—இவை சரியான அளவில் இணைந்த பிஜ் வாங்குவீர்.

கோத்ரெஜ் தயாரிப்பு

# விலையோ குறைவு, தரமோ உயர்வு

CASGS-163-183TM

ஒன்பது மாதங்களாக ஏற்பட்ட துடிப்பு. என்னுடைய இந்த முடிவிற்கும், கடிதத்திற்கும் மூல காரணம் நீங்கள்தான். நீங்கள் மட்டுமேதான்.

நம் வாழ்க்கை இனிமையாக இருக்க வேண்டும். அன்பு கனிந்து இருக்கவேண்டும்; பாலும், பழமுமாய்க் கலந்திருக்க வேண்டுமென்றுதான் திருமண இரவில் இனிப்பும், கனிகளும், பாலும் வைத்தார்கள்

இத்தகைய புனித உறவில் ஜனிக்கும் உயிர்தான் உண்மையில் உன்னதமானதாகும். அத்தகைய வித்தை உருவாக்க வேண்டிய நீங்கள், உங்கள் இயலாமையை வெளியே சொல்ல வெட்கி, அதற்குப் பணயப் பொருளாக என்னை ஆக்கினீர்களே? எதனால்? ஏன்?

கணவன், மனைவியின் ஐக்கியத்தில், பெருமையுடன் வளர வேண்டிய கரு, இப்போது கடைப்பொருளாகி விட்டதே. அதை நினைத்து நினைத்து, என் மனம் துடிக்கும் துடிப்பு?

ஊர், பேர் தெரியாத யாரோ ஒருவனின் உபாயத்தால், கருவைத் தாங்கி, உங்களுடன் உலா வரும் போது, என் மனம் பட்டபாடு? உள்ளுக்குள் நான் நொறுங்கியது, தவித்தது, உங்கள் கை என் மேல் பட்டால் கூட குற்ற உணர்வால், நான் நத்தையாய் ஒடுங்கிச் சுருண்டது, அந்தக் கடவுளைத் தவிர யாருக்கும் தெரியாது.

ஆனால் ஏன் சுமந்தாய்? முதலிலேயே இந்த வழி தெரியவில்லையா என நீங்கள் கேட்பது எனக்குத் தெரியும்.

அதற்கும் காரணம் நீங்கள்தான், நீங்களேதான்.

ஏன் தெரியுமா? நான் மறைந்தால், கண்டிப்பாக உங்கள் தாயார் மறுமணம் செய்விப்பார். கோழையான நீங்கள், உங்கள் குறைபாட்டைச் சொல்லாமல், மறுபடியும் மணமகனுவீர்கள். அந்தப் பெண்ணிடமும் இதே கதைதான்.

உங்களுடைய நடத்தைக்கு மேல் நாட்டை உதாரணம் காட்டிச் சப்பைக் கட்டுக் கட்டினீர்களே, அவர்களைப்போல் தைரியமாக மனம் திறந்து, உங்கள் குறையைக் கூற முடிந்ததா? இல்லை இந்தக் குழந்தை எப்படி உருவானது என்று கூறும் பௌருஷமாவது உங்களுக்கு இருந்ததா?

இதை விட நம் குறையைத் தயக்கமில்லாமல் ஒப்புக் கொண்டு, யாரோ பெற்ற அனாதைக் குழந்தையை ஊரறிய 'தத்து' எடுத்திருந்தால் கூட நான் சந்தோஷமாக அந்தக் குழந்தையைப் பேணி வளர்த்திருப்பேன்.

விஞ்ஞான உலகின் வளர்ச்சியை ஒப்புக் கொள்ளவும் ஏற்றுக் கொள்ளவும் திறந்த மனப்பான்மை வேண்டும். அது நம் நாட்டிற்குப் பொருந்தாது. எதையுமே மூடி, மறைத்து பொத்திப் பொத்தி வளர்ந்த நம்மால், நாகரீகத்தின் உச்சியில் இருப்பதாக வெளியே காட்டிக் கொண்டாலும், அடி மனத்தில் ஊறிய நம் பழக்க வழக்கங்கள் இன்னும் நம்மை விட்டு அகலவில்லையே!

இந்த ரெண்டுங்கெட்டான் நிலையை என்னால் தாங்கிக் கொண்டு உயிரோடு இருக்க முடியாது.

உங்கள் மேலும், அந்தக் குழந்தை மேலும் ஆணை. நீங்கள் மறுபடியும் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. என்னுடைய இழப்பை இந்தக் குழந்தையின் மூலம் தீர்த்துக் கொள்வதாகக் கூறி, கண்டிப்பாக மறுத்து விட வேண்டும். இது என்னுடைய கடைசி வேண்டுகோள்.



புடலங்காய், வெண்டைக்காய் இவைகளை நறுக்கியபின் அரிசி மாவு, கடலை மாவு கலந்த கலவையைக் கொண்டு பிசிறி வைத்து விடுங்கள். அம்மியில் சிறிது கொத்துமல்லி, சீரகம், பெருங்காயம், வற்றல் மிளகாய், உப்பு இவைகளை வைத்து நைசாக அரைத்துக் கொண்டு அந்த மசாலாவையும் காயுடன் பிசிறிக் கொண்டு, வாணலியில் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் காயைப் போட்டு வதக்குங்கள். வாசனையாக, சுவையாக இருக்கும் பொரியல்!

—அனுராதா.

உங்கள் குறையை நிறைவாக்க, உங்கள் வற்புறுத்தலுக்கு, உங்கள் குலம் தழைக்க (ம்... குலம்?) என்னுடைய கடைசி ஆசையை, — இல்லை, ஆணையை — கண்டிப்பாக நிறைவேற்ற வேண்டும். நிறைவேற்றுவீர்களென நம்புகிறேன்.

இப்படிக்கு,
மனத்தளவில் நொந்து போன,
வித்யா.

வித்யா எழுதிய கடிதத்தின் தாள்கள் கூட ராஜுவின் கையில் தைரியமாகப் படபடத்தது. ஆனால் படபடக்கும் இதயத்தை ராஜுவால் அடக்கவோ, பிடிக்கவோ, முடியவில்லையே.

மே'84

# கோடை காலத்தில் கூந்தல்!



கூந்தல் புரதச் சத்துடைய நூலிழை போன்றது. அதன் ஊண் வளர்க்கும் பொருள் நம்முடைய ரத்த ஓட்டத்தினாலும், ஆரோக்கியத்தினாலும் பாதிக்கப்படுகிறது. நீச்சலடித்துவிட்டுப் பிறகு சாதாரண நீரினால் முடி அலசுவது மிகவும் முக்கியம். ஏனென்றால் நீச்சல் குளங்களில் குளோரின் கலவை அபரிமிதமாக இருக்கும். அதிக வெயிலில் செல்வதும், அடிக்கடி ஹேர்டிரையர் உபயோகிப்பதும், குளிர்ந்த காற்று உடைய பிரதேசங்களில் இருப்பதும் கூந்தலின் ஆரோக்கியத்தை மிகவும் பாதிக்கிறது.

சாதாரணமாக நான்கு வகை கூந்தலைப் பார்க்கலாம்.

1. நார்மல் கூந்தல் சிறிது பளபளப்புடன் கூடியது. இதில் பிசுபிசுப்பு இருக்காது. கூந்தல் வாரம் ஒருமுறை அலசினால் போதும்.

2. எண்ணெய்ப் பசையுள்ள கூந்தல் அலசியவுடன் அழகாகத் தோற்றமளிக்கும். அடுத்த நாளே எண்ணெய்ப் பசை தெரியும். இவ்வகைக் கூந்தலை அலசுவதற்கு முன்பு அரைமணிநேரம் நன்றாக 'ப்ரஷ்' செய்தால் எண்ணெய்ப் பசை அகன்றுவிடும்.

3. உலர்ந்த கூந்தலை அடக்கிக் கையாள்வது மிகவும் கடினம். நுனி பிளந்து பறந்து கொண்டிருக்கும். அடிக்கடி எண்ணெய் மஸாஜ் செய்ய வேண்டும்.

4. உலர்ந்த எண்ணெய்ப் பசையுள்ள கூந்தல்; நல்ல நீளமான கூந்தல் உடையவர்களுக்கு வேரின் அருகில் எண்ணெய்ப் பசையும் கூந்தலின் நுனிப்பாகம் உலர்ந்தும் காணப்படும். கூந்தலின் தன்மை காலம், இடம், வயதிற்கேற்ப மாறுபடும். ஆதலின் அதற்குத் தகுந்தவாறு கூந்தலை பராமரிக்க வேண்டும்.

கூந்தலை ரசாயன முறைப்படி பதப்படுத்த ஐந்து முறைகள் இருக்கின்றன. பசையுள்ள க்ரீம், மூலிகைகள், புரதம், பதப்படுத்திய கிரீம், பதப்படுத்திய புரதங்கள்.

## மூலிகைகளினால் அலசுவது எப்படி?

மூலிகைச் சாற்றைக் கூந்தலை நன்றாக அலசிய பிறகு உபயோகிக்க வேண்டும். தவறாமல் வாரம் ஒரு முறையாவது உபயோகித்தால் கூந்தலின் தன்மை



கெடாமல் ஆரோக்கியத்துடன் இருக்கும். கூந்தலைத் தண்ணீரில் நன்ருக அலசிய பிறகு மூலிகைச் சாற்றை மெதுவாக விட்டு அலசவேண்டும். சாற்றைக் கீழே விடாமல் பேஸினில் பிடித்துப் பத்துப் பதினைந்து முறை விட்டு அலசலாம். (படம் 1.) நல்ல கனமான டவலினுல் கூந்தலை ஒற்றி எடுக்க வேண்டும். கூந்தலின் சிக்கை கைகளினுல் மெதுவாகப் பிரித்து அகல வாயுள்ள சீப்பினுல் வாரிக் கொள்ள வேண்டும்.

மூலிகைச் சாற்றைத் தயாரிக்க இரண்டு மேஜைக் கரண்டி உலர்ந்த மூலிகை அல்லது ஒரு கைப்பிடி பச்சை மூலிகையை உபயோகப்படுத்தவேண்டும். இந்த மூலிகையை அரைமணி நேரம் கொதிக்கும் நீரில் ஊற வைத்துப் பிறகு நன்ருகப் பிழிந்து சக்கையை எடுத்து விட வேண்டும்.

விலாமிச்சை வேர், உலர்ந்த கூந்தலுக்கு மிகவும் சிறந்தது. சூரியகாந்தி பூ, விரைகள் உபயோகித்தால் பளபளப்பைக் கொடுக்கும் (படம் 2.)

கிஸ்பூரம்பட்டை, கோரைக் கிழங்கு முதலியவை செம்பட்டை கூந்தலுக்கு ஏற்றவை.

ரோஜா மொக்கு, செம்மரக்கட்டை சாறு கருகருவென்ற கூந்தலை உடையவர்களுக்கு ஏற்றவை.

வெட்டிவேர், வங்காளப் பச்சை, ஞாழல்பூ, முதலியவை கூந்தலைப் பளபளப்பாகவும் மிருதுவாகவும் ஆக்கும் தன்மையுடையது. (படம் 3.)

சந்தனத்தூள், கிச்சிலிக் கிழங்கு, ஆலமரத்து விழுதின் நுனிப்பாகம், செம்பருத்திப்பூ, துளசி முதலியவை கூந்தலுக்குக் குளிர்ச்சியைக்கொடுக்கும்.





**கூந்தலுக்கு உபயோகப்படுத்த மருந்திட்ட திரவங்கள்:**

இவை வெறும் மூலிகைச் சாற்றை விட அதிக சக்தி வாய்ந்தவை. மூலிகைகள் ஆல்கஹாலுடன் (alcohol) பதப்படுத்தித் தயாரிக்கப்படுபவை. இவற்றை வாரம் ஒரு முறை உபயோகித்தால் போதும். மிகவும் மிருதுவாக ஒரு கப்பில் எடுத்துப் பஞ்சு அல்லது டூத் பிரஷினுல் மஸாஜ் செய்து கொள்ளவேண்டும் (படம் 4). கண்களில் படாமல் கவனமாக உபயோகிக்க வேண்டும்.

55 கிராம் ஆல்கஹால், 5 கிராம் வெங்காயம், அல்லது பூண்டு சாறு, 40 கிராம் தண்ணீர், வாசனை எஸென்ஸ்.

பூண்டு அல்லது வெங்காய சாற்றை மூன்று நாட்கள் ஆல்கஹாலில் ஊற வைத்துப் பிறகு வடிக்கட்டி தண்ணீரில் கலக்கவும். வாசனை எஸென்ஸ் தேவைக்கேற்ப கலந்து கொள்ளவும். இளநரை, முடி உதிர்வதைத் தடுக்க இது தகுந்தது.

**கூந்தலைப் பதப்படுத்த க்ரீம் வகைகள்:**

1 கப் லேனேலின் (Lanolin) 1 கப் சூரியகாந்தி எண்ணெய், 1 கப் ஆலிவ் எண்ணெய் அல்லது விளக்கெண்ணெய், இவை மூன்றையும் லேசான சூட்டில் இளக்கிக் கலக்கவும். கூந்தலில் தடவி முடிந்தால் இரவு முழுவதும் ஊறிய பிறகு ஷாம்பூ செய்து கொள்ள வேண்டும். பரபர

மே'84

வென்று வைக்கோல் போன்று உலர்ந் திருக்கும் கூந்தலுக்கு இது நல்ல பயனைத் தரும். வேரில் ஏற்படும் வெடிப்புக்கள் சீராகும்.

அடர்த்தியில்லாத கூந்தலுக்குப் பாதாம் எண்ணெய் சிறிதளவு, கரி சிலாங்கண்ணி இவற்றைக் கலந்து இரண்டு மணி நேரம் ஊறிய பிறகு அலசிக் கொள்ள வேண்டும்.

### கூந்தலைப் பதப்படுத்த மேலும் சில வழிகள்:

கூந்தல் முக்கியமாகப் புரதச்சத்து உடையதால் புரத திரவ வகைகள் அதன் ஆரோக்கியத்திற்கு மிகவும் ஏற்றவை. ஒரு முழு முட்டை, ஆலிவ் எண்ணெய் இவற்றைக் கலந்து கூந்தலில் தடவிக் கொள்ளவேண்டும். ஒரு மணிநேரம் ஊறிய பிறகு ஷாம்பூவினால் அலசவும்.

எந்தவிதமான கூந்தலுக்கும் ஏற்ற சில திரவங்கள் கீழே காணலாம்.

1. இரண்டு மேஜைக் கரண்டிசோம்பு துளசி இலை, சூரிய காந்தி விதை, இரண்டு கப் ஊறிய கோதுமை முதலியவற்றை அரைத்துப் பாதாம் அல்லது ஆலிவ் ஆயிலில் கலந்து உபயோகப்படுத்தலாம்.

2. நல்ல தயிர் ஊற வைத்து அலசிக் கொள்ளலாம்.

3. பால் பவுடரை நீருடன் கலந்து அரை மணி நேரம் ஊறிய பிறகு அலசலாம் (படம் 5.)

4. மருதாணிப் பவுடரை நீரு டன் கலந்து அரை மணி நேரம் ஊறிய பிறகு அலசவும்.

5. கரிசலாங்கண்ணியும் எலுமிச்சை சாற்றையும் கலந்து 15 நிமிடம் ஊறிய பிறகு குளிக்க வேண்டும்.

6. வினிகரில் ஆப்பிள் ஜூஸ் கலந்து உபயோகித்தால் பளபளப்பு கூடும். ஆனால் இது பண வசதியுள்ளவர்களே செய்து கொள்ள முடியும்.

கூந்தல் வளர்வதற்கு ஏற்ற ஊட்டச் சத்து, வைட்டமின்கள், பழம், காய் கறி, மீன், முட்டை முதலியவற்றில் கிடைக்கிறது. நல்ல கவனமும் தேவை யான உணவும் இருந்தால் கூந்தலின் ஆரோக்கியத்திற்கு குறைவு இருக் காது.

-ரேகா

படங்கள்: பி.ஜ. ரமணாஜ்



## இதோ வந்துவிட்டது! இந்தியாவின் மிக இலேசான இஸ்திரிப் பெட்டி. மற்றவற்றை மிஞ்சும் செயல் திறனுடையது.

# ஸ்ஃபியர்ஹாட்

### ஆட்டோமேட்டிக் இஸ்திரிப் பெட்டி, டெஃப்லான் கோட்டிங் செய்யப்பட்டது.

ஸ்ஃபியர்ஹாட் இங்கு இருக்கும் பொழுது இனி வெளிநாட்டு இலேசான இஸ்திரிப் பெட்டிகளை தேடவேண்டியதில்லை.
ஸ்ஃபியர்ஹாட் ஆட்டோமேட்டிக் இஸ்திரி வாங்க பல நல்ல காரணங்கள் இங்கே தருகிறோம்:

- சூடுபிடிக்கக் குறைந்த நேரம். மின்சாரத்தில் சிக்கனம்.
- மிக இலேசானது. எடை— ஒரு கிலோ கிராமுக்கும் குறைந்தது. ஆகவே விரைவாக இஸ்திரி செய்யலாம்.
- டெஃப்லான் தடவிய அடிப் பாகம் உங்கள் துணிகளைப் பாதுகாக்கிறது. சுருக்கறை மற்றும் கருகிய தடம் ஏற்படுவதில்லை.
- அடிப்பாகம் முழுவதும் சமமான சூடு. தரமான, உயர்ரக, டியூபுலர் ஹீட்டிங் எலிமெண்டே இதற்குக் காரணம்.
- ஸ்நாப் ஆக்ஷன் தர்மோஸ்டாட் உங்கள் டிவி, ரேடியோவில் ஒலித் தடங்கல் ஏற்படுத்தாமல் தவிர்க்கிறது.
- எளிதான மின்வொயர் அசைவுக்கு ஏற்றவாறு ரோட்டரி ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது.
- சூடு ஏறாத கைப்பிடி. பிடிக்க மிகவும் வசதியானது.




விற்பனை ஏற்பாடு:




பாட்லிபாய் & கம். லிட்.,
[illegible]




ஸ்ஃபியர்ஹாட் ஃபெதர்லைட் பயன்படுத்தி உங்கள் பொன்னான நேரத்தைக் குறைத்திடுக.

CHAITRA-BB-209 TAM

# ராணுவ மனைவியின் அனுபவம்



சிறு பிரச்னைகளுக்குக் கூட கலங்கிப் போய்விடும் இல்லத்தரசிகளுக்கு இவர்களே வழிகாட்டி!

சமீபத்தில் ஒருநாள் நாலைந்து தோழிகளுடன் பேசிக் கொண்டிருந்த போது ஒருத்தி சொன்னாள். "உன் போன்ற ராணுவ அதிகாரியின் மனைவிக்கு என்ன குறைச்சல்? இலவச வீட்டு வசதி, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி சலுகைகள் எல்லாம் இலவசம். போதும் போதாதற்கு சாமான்கள் பண்டம் பாத்திரங்கள் முதலானவைகள் கூட குறைந்த சலுகையில் "காண்டீனில்" கிடைக்கின்றன. இருந்தாலும் ராணுவ அதிகாரியின் மனைவியாக இருக்க வேண்டும்" அவளது கூற்றில் எத்தனை உண்மையுள்ளது என ஆராய்வதை விட அவள் கூறும் அந்த சௌகர்யங்களை அடைய நாங்கள் செய்யும் தியாகங்கள் எத்தனை?

ராணுவ அதிகாரிகளுக்கு அதுவும் பார்டரில் (Border) அதாவது Field area–வில் பணிபுரிபவர்களின் குடும்பங்கள் வசிக்கக் கொடுக்கப்படுகிற இந்த ராணுவ வீடுகளுக்கு வாடகை கொடுக்கத்தான் செய்கிறோம். இந்த வீரர்கள் அவர்கள் சேவை செய்யும் இடத்தில் குடும்பம் இருக்க இயலாத காரணத்தாலும் குழந்தைகள் கல்வி வசதியில்லாக் காரணத்தாலும் அவர்கள் அங்கிருக்கும் வரை (குறைந்தது 3 வருடங்கள்) அவர்களின் குடும்பங்களுக்குத் தங்க வீட்டு வசதி அவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. உதாரணத்திற்குச் சென்னையில் மவுண்ட் ரோட் நந்தனத்தில் மிலிடரி குவார்ட்டர்ஸ் உள்ளது. அங்கு இருப்பவர்கள் தத்தம் குழந்தைகளுடன் தனியாக வசித்து வருகிறார்கள். வசதியான அழகிய



வீட்டில் இருந்தாலும் கணவருடனும் குழந்தைகளுடனும் சேர்ந்து இருக்கும் இனிய அனுபவத்தைப் பெற எங்களுக்கு வருடத்திற்கு இரண்டு மாதங்களே முடிகிறது. அதுவும் கணவருக்கு லீவு கிடைக்காவிடில் இந்த வாய்ப்பும் இல்லை. தலைவன் செய்ய வேண்டிய கடமைகளையும் பொறுப்புக்களையும் முழுவதும் ஏற்று நிர்வகிக்க வேண்டியிருக்கிறது.

குழந்தைகள் படிப்பு, வைத்தியம் மற்ற குடும்ப வரவு, செலவு முதலிய விஷயங்களிலும் மனைவியே முடிவெடுத்துப் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டியிருக்கிறது. இதெல்லாம் எத்தனை கஷ்டம் என்பது செய்து பார்த்தால் தான் தெரியும். "அவர் இன்ஸ்பெக்ஷனிலிருந்து எப்போது வருவார் என இருக்கு. ஏதோ சமையல் வீட்டு வேலையோடு நில்லாமல் விட்டு, வெளிப்பொறுப்பு பூராவும் என் தலையில் போட்டு இந்த மூன்று மாதங்களாக என்னால் முடியவேயில்லையம்மா" என்று தன் தோழி ஒருத்தி அலுத்துக் கொண்டதைக் கேட்டு எனக்கு அழுவதா, சிரிப்பதா என்றே தெரியவில்லை. இவளைப் போன்ற சிலருக்கு ஒரு 3, 6 மாதம் கூட வீட்டுப் பொறுப்பைச் சுமக்க முடியவில்லையே! நாங்கள் எப்போதுமே தனியாக நிர்வகிக்க வேண்டியிருக்கிறதே!

ஒரு தடவை–அவருக்கு டில்லிக்கு மாற்றல் ஆர்டர் வந்து கிளம்பவேண்டிய தினமும் வந்தது. அம்மாவும், ஓரகத்தியும் இருக்கவே வீட்டு வேலைகளை அவர்கள் கவனித்துக் கொள்ள நான் சாமான்களை எல்லாம் பேக் செய்தேன். இதில் கைக்குழந்தை, 3 வயது பிள்ளை அழுகை, குறும்பு வேறு. அன்று மாலை கிளம்ப வேண்டும். காலையில் அவருக்கு ஆபீஸ் வேலை நிமித்தமாக வேறு ஒரு ஊருக்கு உடனே போய் வர உத்தரவு வந்து விட்டது. என் கணவர் "நீங்கள் பதான்கோட் சென்று ரயில்வே ஸ்டேஷனில் காத்திருங்கள். நான் வேலையை முடித்துக் கொண்டு ஹெலிகாப்டரில் வந்து விடுகிறேன்" எனச் சொல்லி விட்டுப் போனார். நான், அம்மா, மைத்துனர், ஓரகத்தி வேலைக்காரர்கள் உதவியுடன் சாமான்களுடன் கிளம்பி பதான்கோட் ஸ்டேஷன் வந்து சேர்ந்தோம். வழியனுப்ப அவருடைய சக உத்தியோகஸ்தர்கள் அனைவரும் மாலையுடன் வந்திருந்தனர். நேரம் போய்க் கொண்டே இருந்தது. அவரைக் காணவில்லை.

ரயில் கிளம்ப 1 மணி நேரம்தான் இருந்தது. என் மனத்தில் கவலை ஏற்பட ஆரம்பித்து விட்டது. ஏன் இன்னும் வரவில்லை? ரயில் கிளம்பும் முன் வந்து விடுவாரா? இல்லாவிடில் என்ன செய்வது?

தெரியாத ஊர். கூட உறவினர்கள். குழந்தை. தவிர எல்லாச் சாமான்களையும் சேர்க்க வேண்டுமே என்கிற கவலையில் நண்பர்களின் பேச்சு என் காதுகளில் விழவில்லை.

ஆபீஸுக்குப்போன் செய்து அவரைப்பற்றி விசாரித்தேன். ஆனால் அவர்களோ 'அப்போதே கிளம்பி விட்டாரே, இன்னுமா வந்து சேரவில்லை' என்று என்னையே கேட்டு என் கவலையை இன்னும் அதிகரித்தனர். ரயில் கிளம்ப முதல் மணியும் அடித்து விட்டார்கள். பிரயாணிகள் ஏறத் தொடங்கி விட்டனர். எனக்கோ என்ன செய்வது என்றே புரியவில்லை. ஹெலிகாப்டர் நினைவு வேறு வந்து என்னைக் கிலி கொள்ளச் செய்தது. கவலையை வெளியே காட்டிக்கொள்ள முடியவில்லை. நண்பர்கள் மிலிடரி ஆபீஸரின் மனைவி இப்படி பயப்படுவார்களா? என்று



கேலி செய்வார்கள். என் நிலையை வெளியே காட்டாவிடினும், எப்போது மயக்கமுற்று, விழுந்து விடுவோமோ? என்ற நிலையில் இருந்தேன். நான் எப்படித்தான் ரயிலில் ஏறினேனோ. அச்சமயம் பார்த்து அவர் ஓடிவந்து எங்கள் கம்பார்ட்மெண்ட்டில் ஏறிக் கொள்ள ரயிலும் நகர்ந்துகொண்டே இருந்தது. எனக்குச் சரியாக மூச்சு வந்தது. அவரைப் பார்த்துக் கோபத்தையும் மறந்து சிரித்து விட்டேன்.

இப்படிப்பட்ட நெருக்கடி நேரம் எத்தனையோ எங்கள் வாழ்வில். அலைகளற்ற நீரோட்டமல்ல எங்கள் வாழ்க்கை! இடும் எனத் தோன்றும் சோதனைப் புயல்கள் எத்தனை. விடுமுறை கிடைத்து வந்த கணவருடன் உல்லாசமாக நாட்களைக் கழிக்க எண்ணும் போது உடனே வரும்படி செய்தி வந்த கசப்பான தருணங்கள் எத்தனை?

சமீபத்தில் நடந்த போரின் சமயத்தில் அங்கே கணவன்மார்கள் எப்படி இருக்கிறார்கள் என்றே தெரியாமல் மனைவிகள் கலங்கித் தவித்துக் கொண்டிருந்த சமயம். கடிதங்கள் வருவதும் நின்று விட்டது.

அச்சமயம் பார்த்து என் மகனுக்கு ஸ்கூல் செல்லும் போது ஏற்பட்ட விபத்தில் உட



லெல்லாம் காயம் பட்டு மருத்துவமனையில் அவனைச் சேர்க்கும்படியாகி விட்டது. என் மனம் பட்ட பாட்டை எப்படி எடுத்துரைப்பது? இருவரின் நலனை வேண்டி, எல்லாப் பணிகளையும் கவனித்துக் கொண்டிருந்தேன். நோயுற்ற குழந்தையிடம் கவலையைக் காட்ட முடியுமா? கதை சொல்லி விளையாட்டுக் காட்டி உணவும், மருந்துகளும் கொடுத்து. மற்ற குழந்தைகளுக்கு வேண்டிய கடமைகளையும் செய்து கொண்டிருப்பதைப் பார்த்து எப்படி இத்தனை மனப்போராட்டங்களை மனத்துள் அடக்கி அமைதியாக அலுவல்களைப் பார்க்க முடிகிறது என என் அன்னையே வியந்தார். வெளியே பதில் கூறாவிடினும் மனத்துள் 'நான் ஒரு ராணுவ அதிகாரியின் மனைவி. கோழையாக, சுயநலமியாக, உல்லாச வாழ்வை மட்டும் விரும்புபவளாக இருக்கலாமா? கணவர் ஊணுறக்கமின்றி நாட்டைக்காக்க உழைக்கையில், நான் அவர் வீட்டை நலமுடன் காக்க வேண்டாமோ? எனக் கூறிக்கொள்வேன்.

ஒருவாறாக சோதனை நேரம் முடிந்து என் செல்வனும் பிழைத்து எழுந்தான். என் கணவரும் ஒரு மாத லீவில் வந்தார். பிரார்த்தனை நிறைவேற்ற திருப்பதி சென்றோம். அவர் என்னிடம் ''இந்த நெருக்கடியை எப்படிச் சமாளித்தாய். வெளியூரில் நானும் படுக்கையில் மைந்தனும் இருந்தபோது எப்படி வேதனைப் பட்டாயோ'' என்றார்.

இப்படிப்பட்ட இன்னல்களும், இன்பங்களும் கலந்தது எங்கள் வாழ்க்கை. ஒவ்வொரு விநாடியும் நமது தாயகத்தைக்காப்பதுடன் எங்கள் கணவரின் விலை மதிப்பற்ற இன்னுயிரையும் காப்பாற்று எனவேண்டிக் கொண்டேயிருப்பர் என்னைப் போன்ற இல்லத்தரசிகள்.

**-சரோஜ் சேகர்**



# தொக்கு

இந்தக் கோடையிலே, ஆவக்காய் போடுகிற கையோடு, தொக்கு வகைகளும் தயார் செய்து பத்திரப்படுத்துங்கள். வருஷம் முழுவதும் ஊறுகாய் கவலையே இல்லை. தொக்கு வகைகள் ஊறுகாயாக மட்டுமின்றி, சாதம் கலக்கவும் பயன்படும்.

## மாங்காய்த் தொக்கு

நல்ல புளிப்பான கத்தேமார் மாங்காய்1, நல்லெண்ணெய் 200 மி. லி. கடுகு 1டீஸ்பூன் பெருங்காயம் 5 கிராம், வெந்தயம் 1டேபிள் ஸ்பூன், விரலி மஞ்சள் 2, மிளகாய் வற்றல் 200 கிராம், உப்பு தேவையான அளவு.

பொதுவாக எல்லாத் தொக்கு வகைக்கும், வெந்தயம், மஞ்சளை எண்ணெய் விடாமல் வறுத்துப் பொடி செய்து எடுத்துக்கொள்ளவும். பெருங்காயத்தையும், உள் ஈரம் இல்லாமல் பொரித்துப் பொடித்துக்கொள்ளவும். தொக்கு வகைகளுக்கு மில்லில் அரைத்த மிளகாய்ப் பொடி சேர்த்தால் இரண்டாம்பட்சம் தான். மிக்ஸியில் அல்லது இடித்து எண்ணெய் விட்டு வறுத்த மிளகாயை உபயோகித்தால் பிரமாதமாக இருக்கும். பழவாசனை வராமல், ஒரு வருடம் ஆகியும் அன்றுதான் தயாரித்தது போல இருக்கும்.

மாங்காயைத் தோல் சீவித் துருவிக் கொள்ளவும். கல்கத்தா சட்டி. அல்லது மாக்கல் சட்டியில் தொக்கு கிளறவும். இரும்புச் சட்டியில் கிளறினால் துருநாற்றம் அடிக்கும். நல்லெண்ணெயைக் காயவிட்டு, கடுகு போட்டு வெடித்ததும், மாங்காய்த் துருவலைப் போட்டு வதக்கவும். வெந்தயப் பொடி, மஞ்சள் பொடி 1 டேபிள் ஸ்பூன் போடவும். வதங்கியதும் பொடித்தபெருங்காயம், இடித்த மிளகாய்ப் பொடி, உப்பு சேர்த்துச் சுருள வதக்கவும். எண்ணெயைக் கலக்கி, சட்டியில் ஒட்டாமல் சுருண்டு வரும் போது இறக்கி, ஜாடி, பாட்டிலில் எடுத்து வைத்து ஆறியதும் அழுந்த மூடவும். தேவைப்படும்போது கொஞ்சமாக வேறு ஒரு கப்பில் எடுத்து வைத்துக் கொண்டு பரிமாறவும். ஈரமான ஸ்பூன் போட்டுக் கிளறக் கூடாது. இரண்டு நாளைக்கு ஒரு முறை கிளற வேண்டும். வாரம் ஒரு முறை வெய்யிலில் வைக்க வேண்டும்.




## எலுமிச்சம்பழத் தொக்கு

ஆம், எலுமிச்சம்பழத் தொக்கு தான். பழுத்த எலுமிச்சைப்பழம் 25, மிளகாய் வற்றல் 200 கிராம், நல்லெண்ணெய் 200 மி. லி. பெருங்காயம் 5 கிராம். வெந்தயப்பொடி, மஞ்சள்பொடி, 1 டேபிள் ஸ்பூன், உப்பு தேவையான அளவு.

எலுமிச்சம்பழங்களை நான்காக அரிந்து, கூடியவரை கொட்டைகளை நீக்கிவிட்டு, உப்பு சேர்த்து, வெய்யிலில் வெள்ளைத் துணியைப் பாட்டில் மேல் வேடுகட்டி ஒரு வாரம் அல்லது பத்துநாள், வெய்யிலில் வைக்கவும். இப்போது பழம், உப்பு, வெய்யிலில் நொந்து பதமாய் இருக்கும். மிளகாய் வற்றல், பெருங்காயத்தை எண்ணெய் விட்டு வறுத்து, மிளகாய் வற்றலை விதை மசியும்படி இடித்து, பெருங்காயத்தைப் பொடிக்கவும். மாக்கல் சட்டியில் கடுகை நல்லெண்ணெய் விட்டுத் தாளித்து, எலுமிச்சம்பழத்தை, மத்தால் நன்கு மசித்து விட்டு, இதில் சேர்த்து, வெந்தய மஞ்சள் பொடி, மிளகாய்ப் பொடி, பெருங்காயப் பொடி சேர்த்துக் கிளறி, ஒட்டாமல் வந்ததும் இறக்கி, பத்திரப்படுத்தவும். இதுவும் ஊறுகாயாக மட்டுமின்றி, சாதம் கலக்கவும் பயன்படும். வருஷத்திற்கும் பாதுகாத்து வைக்கலாம்.

## இஞ்சி தொக்கு

முற்றிய இஞ்சி கூடாது. நல்ல குருத்து இஞ்சி 250 கிராம். மிளகாய் வற்றல்75 கிராம், கடுகு, பெருங்காயம், வெந்தயப் பொடி, மஞ்சள்பொடி, நல்லெண்ணெய் தேவையான அளவு. புளி 100 கிராம்.

இஞ்சியைத் தேய்த்து அலம்பி, பொடிப் பொடியாய் நறுக்கவும். புளியை ஆய்ந்து, மிளகாய் வற்றலை வறுத்துக் கொண்டு, இஞ்சியையும் வதக்கி, புளி, உப்பு, இஞ்சி, மிளகாய் வற்றலை, அம்மியில் கெட்டியாக அரைக்கவும். பாதி நல்லெண்ணெயை விட்டு, கடுகு, காயம் தாளித்து, அரைத்த விழுதைப் போட்டு, ஒட்டாமல் கிளறி இறக்கவும். வாயகன்ற ஜாடியில் எடுத்து வைத்து நடுவில் குழித்து, பாக்கி நல்லெண்ணெயைக் காய்ச்சிக் கொட்டவும். எண்ணெய் மெதுவாக ஊறிக்கொள்ளும். சாதம் பிசைந்து சாப்பிட்டால் ஜீரண சக்தி ஏற்படும், உடம்புக்கும் நல்லது. நாக்கிற்கும் ருசி. இதே மாதிரி மாங்காய் இஞ்சியைத் தொக்கு செய்யலாம்.

## நெல்லிக்காய்த் தொக்கு

இதுவும் சித்ரான்னம் கலக்க மிக வும் ஏற்ற தொக்கு. நெல்லிக் காய் 1 கிலோ. மற்ற சாமான்கள் தேவையான அளவு வழக்கம் போல்.

நெல்லிக்காய்களை அலம்பி. ஆவியில் வேகவைத்து, ஆறியதும், விதைகளை நீக்கி உதிர்த்துக் கொள்ளலாம். அம்மியில் ஒட்டி, ஒட்டி, வெண்ணெயாக அரைக்கவும். மாக்கல் சட்டியில், வழக்கம் போல் கடுகு, காயம் தாளித்து, நெல்லிக்காய் விழுது, உப்பு, மிளகாய்ப்பொடி, வெந்தயம், மஞ்சள்பொடி சேர்த்து, சுருள வதக்கி இறக்கவும்.

## பச்சை மிளகாய்த் தொக்கு

கிலோ ரூ. 1.50, ரூ. 2.00 என்று பச்சைமிளகாய் மலிவாய் விற்கும் சீசனில் தயாரித்து வையுங்கள். வருஷம் மூன்று ஆனாலும் 'பழம் புளி' போல் மிக நன்றாக இருக் கும். வீணாகாது. தோசைக்குத் தொட்டுக் கொள்ள மிக ஏர்வை. பச்சை மிளகாய் அரை கிலோ, புளி 350 கிராம், உப்பு தேவையான அளவு, பெருங் காயம் 10 கிராம், கடுகு 1 டேபிள் ஸ்பூன். உளுத்தம் பருப்பு 1 டேபிள் ஸ்பூன். நல் லெண்ணெய் 100 மி.லி.

கடுகு, உளுத்தம்பருப்பு, காயத்தை வறுத்து எடுத்துக் கொண்டு, பச்சை மிள காய்களைக் காந்தாமல் வறுக்கவும். மூடி வதக்கவும். வதக்கும்போது வெடிக்கும். கவனமாக வதக்காவிட்டால், கையில் சுட்டுவிடும். பச்சை மிளகாய் வெந்ததும், புளி, உப்பு, மிளகாயை ஒட்டி ஒட்டி நைஸாக அரைத்துக் கடைசியில் உளுத்தம் பருப்பு, கடுகு, காயத்தை கலந்து, உருட்டி ஒரு ஜாடியில் (கல்) கல்சட்டியில் எடுத்து வைக்கவும். மீதம் இருக்கும் நல்லெண் ணெயை நடுவில் குழித்து விட்டு வைக்கவும். அரைத்த அம்மியை அலம்பிக் கெட்டியான மிளகாய்ப் பச்சடியாக ஒருநாள் உபயோகிக்க லாம். தேவைப்படும்போதெல்லாம் தொக்கா கவோ, சற்று வெந்நீர் விட்டுத்தளர்த்தி மிளகாய்ப் பச்சடியாகவோ, தோசை,இட்லி, தயிர் சாதத்திற்குத் தொட்டுக் கொள்ள உபயோகிக்கலாம்.

## தக்காளித் தொக்கு

கிழ்க்காணும் முறையில் செய்தால் தக் காளித் தொக்கு வழக்கமாக ஒரு வாரத்தில் வீணாகி விடக் கூடியது, ஆறுமாதங்கள் நன்றாய் இருக்கும். கோடைக்காலத்தில் தக்காளிப் பழங்களை அலம்பித் துடைத்து, தேவையான உப்புப் போட்டு வெய்யிலில் வேடு கட்டி வைக்கவும். 2 அல்லது 3 நாளில் தோலி வழண்டு விடும். தோலியைத் தனியாக எடுத்துத் தாம்பாளத்தில் உலர வைக்கவும். உலர்ந்ததும் பொடித்து, பாத்தி ரத்தில் போடவும். 10 அல்லது 15 நாள், கலவை சேர்ந்து வரும் வரை வெய்யிலில் வைத்து. பிறகு கல்சத்தா இலுப்பசட்டியில் தேவையான நல்லெண்ணெய் விட்டு, கடுகு, காயம், தாளித்துக் கொண்டு தக்காளி விழுது, இடித்த மிளகாய்ப்பொடி, வெந்தய மஞ்சள்பொடி சேர்த்து, சுருள வதக்கி, பாட்டிலில் போட்டு வைத்துக்கொள்ளுங்கள். தேவைப்படும்போது தக்காளி பாத் தயாரிக்க லாம். தொட்டுக் கொள்ள ஏ. ஒன்.காம்பி னேஷன் பூரி, சப்பாத்தி, தோசைக்கு.

## வெங்காயத் தொக்கு

பெரிய வெங்காயத்தைத் தோலி உரித்துப் பொடிப் பொடியாக நறுக்கி.ஒரு ஸ்பூன்உப்பு சேர்த்துப் பிசையவும். 1 கிலோ வெங்கா யத்திற்கு 350 கிராம் புளி, 200 கிராம் மிளகாய் வற்றல், ஒரு டேபிள் ஸ்பூன் உ. பருப்பு, 1 டேபிள் ஸ்பூன் கடுகு, 200மி.லி. நல்லெண்ணெய் தேவை.

நல்லெண்ணெய் விட்டு, கடுகு, உளுத்தம் பருப்பை வறுத்து எடுத்துக் கொண்டு வெங்காயத்தை வதக்கவும், வதக்கிய வெங்காயம், உப்பு, புளி, மிளகாய் வற்றல் ஒட்டி அரைத்து, கடைசியில், கடுகு, உளுத்தம்பருப்பை நடத்தி, விழுதை எடுத்து, மீதமிருக்கும் நல்லெண்ணெயை விட்டுச் சுருள வதக்கவும். சாதம் பிசைந்து சாப்பிடவும் தொட்டுக் கொள்ளவும் மட்டு மின்றி, மருத்துவ ரீதியாகவும் உடலுக்கும் நன்மை பயக்கும். கண்டைக்காயையும், மணத்தக்காளியையும் இந்த முறையில் தொக்கு செய்யலாம்.

-கனவல்லி சாரங்கபாணி.





பரிசு பெற்ற குறிப்புகளைத் தேர்ந்தெடுத்தவர்கள்:

**கிருஷ்ணகிரி மகளிர் மன்றம்,**

**கோஆப்பரேடிவ் காலனி,**

**கிருஷ்ணகிரி.**

# இம் மாத இல்லத்தரசி

முதல பரிசு: **நீள அடுக்கு**

**தக்காளி, பட்டாணி பிட்ஸா**

**தேவையான பொருட்கள்:**

மைதா — 2 கப்,
ஈஸ்டு — 1 டேபிள் ஸ்பூன்.
வெதுவெதுப்பான தண்ணீர் — 1 டேபிள் ஸ்பூன்.
பால் — கால் கப்,
எண்ணெய் அல்லது வெண்ணெய் —கால்கப்
சர்க்கரை — 1 டேபிள் ஸ்பூன்.
உப்பு — அரை ஸ்பூன்.

**செய்முறை:**

வெதுவெதுப்பான தண்ணீரில் ஈஸ்டு கலந்து வைக்கவும். 10 நிமிடத்தில் நுரைத்து வரும். மைதா மாவைச் சலித்துக் கொள்ளவும். பால், சர்க்கரை, எண்ணெயை நன்றாக மரக்கரண்டியால் கலந்து கொள்ளவும். சர்க்கரை நன்றாகக் கரைய வேண்டும். மைதா, உப்பு, ஈஸ்டு தண்ணீர், சர்க்கரை கலவை யாவற்றையும் நன்றாகப் பிசைந்து, பாத்திரத்தில் போட்டு, ஈரத் துணியால் மூடி வைக்கவும். அதற்குள் தக்காளி, பட்டாணி கலவை தயார் செய்யவும்.

**தேவையான பொருட்கள்:**

தக்காளி — கால் கிலோ,
பட்டாணி — கால் கிலோ,
வெங்காயம் — 2,
பச்சை மிளகாய் — 2
இஞ்சி — சிறிய துண்டு,
பூண்டு — 4 பல்,
கொத்துமல்லி — அரை கட்டு,
குடமிளகாய் — 1,
தேவையான அளவு உப்பு,
சீஸ் சிறிய துண்டு,
மிளகாய்த் தூள் — 1 டீஸ்பூன்.



மார்ச் மாத மங்கையர் மலரில் அறிவிக்கப்பட்ட இல்லத்தரசி போட்டியில் பரிசுபெற்ற கட்டுரைகள்

மே'84

தனியா தூள் — அரை டீஸ்பூன்,
கரம் மசாலா — அரை டீஸ்பூன்,
எண்ணெய் — 2 டேபிள் ஸ்பூன்.

**செய்முறை:**

பாத்திரத்தில் எண்ணெய் விடவும். பொடியாக நறுக்கிய வெங்காயம் வதக்கவும். பொன் நிறமாக மாறியவுடன் தக்காளி துண்டுகளைச் சேர்க்கவும். தக்காளி வதங்கியவுடன் இஞ்சி, பூண்டு அரைத்த கலவையைச் சேர்க்கவும். பொடியாக நறுக்கிய பச்சை மிளகாய், மிளகாய்ப் பொடி, தனியாபொடி, கரம் மசாலா, தேவையான அளவு உப்பு, யாவற்றையும் சேர்த்துக் கலக்கவும். வேக வைத்த பச்சைப் பட்டாணியைச் சேர்க்கவும். இறக்கும்முன் பொடியாக நறுக்கிய கொத்துமல்லி சேர்த்து இறக்கி விடவும்.

ஒரு மணி நேரம் கழித்து மாவு இரண்டு மடங்கு பெரிது ஆகி இருக்கும். எண்ணெய் தடவிய அலுமினியத் தட்டில் மாவை வட்ட வடிவமாகத் தட்டி வைக்கவும். அரை மணியில் மாவு இரண்டு மடங்கு பெரிதாகி இருக்கும். அதன் மேல் தக்காளி, பட்டாணி கலவையைப் போடவும். குடமிளகாயை வட்ட வட்டமாக வெட்டி, சீஸுடன் துருவி மேலே போடவும். எலக்ட்ரிக் அல்லது அடுப்பில் பேக் செய்யவும். சுமார் 15 நிமிடம் பேக் செய்தால் போதும். சாப்பிட மிகவும் ருசியாக இருக்கும்.

—திருமதி வசந்த்ராஜ், சென்னை—20

இரண்டாம் பரிசு: **நெய் டப்பா**

## மைதா சுண்டி

**தேவையான பொருட்கள்:**

மைதா — 300 கிராம்,
கொத்திய கறி — 400 கிராம்,
பெரிய வெங்காயம் — 6,
பூண்டு (பெரியது) — 4,
சோம்பு — 2 டீஸ்பூன்,
லவங்கம் — 6,
பட்டை — 1 துண்டு,
மிளகாய்த்தூள் — 3 டீஸ்பூன்,
தேங்காய்த் துருவல் — அரை மூடி,
பொட்டுக்கடலை — அரை ஆழாக்கு
கசகசா — 2 டீஸ்பூன்,
ம. தூள் — அரை டீஸ்பூன்,
க. எண்ணை — கால் லிட்டர்,
தேவையான அளவு — உப்புத் தூள்.
காய்ந்த வாழைநாரை நீரில் நனைத்து மெல்லியதாய்க் கிழித்து வைத்துக்கொள்ளவும்.

**செய்முறை:**

கொத்திய கறியை சுத்தம் செய்து நீர் இன்றிப் பிழிந்து வைக்கவும். வெங்காயம் பூண்டு இவற்றை மெல்லியதாக நறுக்கவும். வாணலியை அடுப்பிலேற்றி 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டு சுத்தம் செய்த கறியையும் மஞ்சள் தூள் 1 சிட்டிகை உப்புத் தூள் சேர்த்து நன்கு வதக்கவும். (நீர்விட வேண்டாம்.) 10 நிமிடம் போல் விடாமல் வதக்கிய பின் ஒரு பாத்திரத்தில் எடுத்துக் கொட்டி வைக்கவும். மறுபடியும் வாணலியை வைத்து 2 டீஸ்பூன் எண்ணெய் விட்டு வெங்காயம் பூண்டு இவற்றை வெப்பாக வதக்கி முதலில் வதக்கிய கறியுடன் சேர்த்து வைத்துக் கொள்ளவும். மறுபடியும் வாணலியை அடுப்பில் வைத்து ஒரு டீஸ்பூன் எண்ணெய் விட்டு தே. துருவல், சோம்பு, கசகசா, பட்டை, லவங்கம் இவற்றைச் வெப்பாக வறுத்துத் தனியே எடுத்து வைத்துக் கொள்ளவும்.

முதலில் வதக்கிய கறியை உரலில் போட்டு நன்கு இடிக்கவும். 10 நிமிடம் போல் இடித்ததும் வழித்தெடுத்துவிட்டு, வறுத்து வைத்துள்ள கடலை, கசகசா, தே. துருவல், சோம்பு, ல. பட்டை, இவற்றை போட்டு கரகரப்பான தூள்போல் வரும் வரை இடித்து இவற்றை கறிகலவையில் சேர்த்து அளவான உ. தூளையும், மி. தூளையும் சேர்த்துக் கையில் நன்குப் பிசிறி எல்லாவற்றையும் நன்குக் கலக்கவும். இப்பூரணத்தை பெரிய நெல்லிக்காய் அளவு எடுத்து நன்கு உருட்டி வாழை நாரால் எதிர்ப் பக்கத்திலிருந்து ஆரம்பித்து அடுத்தடுத்துச் சுற்றி ஆரம்பித்துள்ள பகுதிக்கு வந்ததும் இருமுனையும் இணைத்து இருகிவிடவும். இதேபோல் எல்லாவற்றையும் செய்து வைத்துக் கொள்ளவும்.

மைதாவை சலித்து சுத்தம் செய்துஅகலமான பாத்திரத்தில் போட்டு சிறிது உப்புத் தூளையும், அரை டீஸ்பூன் அரிசி மாவையும் சேர்த்து நீர்விட்டு சிறிது தழதழப்பாகக் கரைத்து வைத்துக்கொள்ளவும். வாணலியை அடுப்பிலேற்றி எண்ணெய்விட்டு காய்ந்ததும் நாரில் கட்டி வைத்துள்ள உருண்டை எடுத்து மாவில் தோய்த்து நன்கு நான்காக எண்ணெயில் போட்டு சிவந்ததும் எடுத்து விடலாம். உருண்டைகளை மாவில் நனைத்து வைக்க வேண்டாம். அவ்வப்போது தோய்த்து எண்ணெயில் விடவும். இதுவே மைதா சுண்டி என்பது.

குறிப்பு: அசைவம் வேண்டாதவர்கள் கறிக்கு பதிலாக பெரிய கருணை கிழங்கைத் தோல் நீக்கிச் சிறுசிறு துண்டங்களாக நறுக்கி எண்ணெயில் வதக்கி இடித்துக்கொள்ளலாம்.

—நிர்மலா, திருவண்ணாமலை.

மூன்றாம் பரிசு: **அன்னக் கூடை**

## ஆலூ பரோா

**தேவையான பொருட்கள்:**

மைதாமாவு — அரை கிலோ,
உருளைக் கிழங்கு — கால் கிலோ,
டால்டா — 2 டேபிள் ஸ்பூன்.

5 வருடம் உத்திரவாதமுள்ள 'மெரி' சூப்பர் ஸ்பெஷல் தங்க கவரிங் நகைகளை 15 வருட ஆராய்ச்சியின் பலனாக இந்தியாவில் முதல் முறையாகத் தயாரித்து இந்தியா முழுவதும் அதிக அளவில் வி.பி.பி. மூலம் அனுப்பி வரும் ஸ்தாபனம். சகல விபரங்களுக்கும் இனும் கேட்லாக் வாங்கிப் பார்க்கவும் இதில் உள்ள நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதினால் வி.பி.பி. மூலம் பொருட்கள் அனுப்பப்படும். (வி.பி.பி. சார்ஜ் தனி)



MERI GOLD COVERING WORKS. (Estd; 1963)
P.O. BOX 1405, 14, RANGANATHAN STREET
T. NAGAR MADRAS-600 017 INDIA



# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு குணா

## கூந்தல் தைலம்

தலைமயிர் உதிர்தல் செம்பட்டை நிறம் பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்கு தேய்த்து வந்தால் தலைமயிர் நீண்டு கருத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு மண்டையில் சொரிந்தால் செரில் உதிர்தல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்.

V.P.P. மூலம் பெற ரூ.16.25 (தபால் செலவு இலவசம்)

விபரங்களுக்கு எழுதவும்: **நவசக்தி வைத்தியசாலை**
த.பெ.எண்: 7, சேலம் 636 001

**எமது தைலம் கிடைக்குமிடங்கள்:** ஹேமா மெடிகல்ஸ், மெமோரியல் ஹால் தெரு, சென்னை-3. வேலவன் மெடிக்கல்ஸ்—அமிஞ்சிக்கரை, சென்னை. திருமகள் மெடிகல்ஸ்—குடியாத்தம். சித்ரா மெடிகல்ஸ்—கடலூர். ரோஜா மெடிகல்ஸ்—சேலம். முத்து மெடிகல்ஸ்—ஆத்தூர். கஸ்தூரிபா மெடிகல்ஸ்—நாமக்கல். கோபாலகிருஷ்ணா மெடிகல் ஸ்டோர்ஸ்—திருவண்ணாமலை. மூர்த்தி மெடிக்கல் ஸ்டோர்ஸ்—ஓசூர். காசிநாத மெடிகல்ஸ்—கோவை. அன்னம்மாள் மெடிக்கல்ஸ், ஜவகர் பஜார்—கரூர். சண்முகா மெடிக்கல் ஹால் திருச்சி. குமார் மெடிக்கல்ஸ்—மதுரை. கோமதி மெடிக்கல்ஸ்—பூர்ணகலா தியேட்டர் அருகில், திருநெல்வேலி. பிரசாத் ஸ்டோர்ஸ்-25 K. G. சர்க்கிள், பெங்களூர். நல்ல பெருமாள்-கெமிஸ்ட் & டிரக்கிஸ்ட், நாகர்கோவில்.

சற்று புளித்த தயிர் — 1 கப்.
ஓமம் — 2 டீஸ்பூன்.
உப்பு — தேவையான அளவு
எண்ணெய் பொரித்தெடுக்க.

சனாவிற்கு:

காபூலி சனா எனப்படும் பெரிய வெள்ளைக் கடலை — கால் கிலோ,
புளி — ஒரு கொட்டைப் பாக்களவு
தனியா — 1 டேபிள் ஸ்பூன்.
வெங்காயம் — 2.
கொத்துமல்லி — 1 கட்டு.
பச்சை மிளகாய் — 3.
கரம் மசாலாப் பொடி — அரை டீஸ்பூன்.
எண்ணெய் — 2 டேபிள்ஸ்பூன்.
சீரகம் — 1 டீஸ்பூன்.

ஆலூ படூரா:

**செய்முறை:**

மைதாவைச் சலித்தெடுக்கவும். உருளைக் கிழங்கை வேக வைத்துத் தோலுரித்து நன்றாகப் பிசையவும். சிறிது நேரம் அழுத்திப் பிசைந்த பின் ரப்பர் மாதிரி பசை யுடன் வரும். மைதாமாவுடன் டால்டா, ஓமம், புளித்த தயிர், உப்பு இவற்றைச் சேர்த்து உருளைக் கிழங்கையும் சேர்த்து நன்றாகப் பிசைந்து ஒரு ஈரத் துணியால் மூடி 4 முதல் 5 மணி நேரம் வைக்கவும். பின்னர் மறுபடியும் ஒருமுறை பிசைந்து சற்று தடிமனான பூரிகளாக இட்டுப் பொரிக்கவும். இது சனாவுடன் சாப்பிடச் சுவையாக இருக்கும்.

சனா செய்ய:

கடலையை 10 மணி நேரம் ஊறவைத்து பிறகு வேக விடவும். வெந்த கடலையில் ஒரு டீஸ்பூன் எடுத்துத் தனியா வெங்காயம் கொத்தமல்லி பச்சை மிளகாய் சேர்த்து நன்றாக அரைக்கவும். அடுப்பில் வாணலியில் எண்ணெய் வைத்துக் காய்ந்த பின் சீரகம் தாளித்து அரைத்த விழுதைப் போட்டு உப்பு சேர்த்து வதக்கவும். நன்றாக கருண்டு வதங்கியபின் புளியைக் கரைத்து ஊற்றவும். ஐந்து நிமிடங்கள் கொதித்தபின் வெந்த கடலையைக் கொட்டி தேவையானால் மேலும் உப்பு சேர்த்துக் கொதிக்க விடவும். சற்று கொதித்து கெட்டியானதும் மசாலாப் பொடி தூவி இறக்கவும். சூடாக படூரா வுடன் பரிமாறவும்.

—லலிதா ராஜாராமன் போபால்.

## ஆறுதல் பரிசு: சாப்பாட்டுத் தட்டு

## மைதா வெமல்கி

**தேவையான பொருட்கள்:**

மைதா மாவு — 200 மில்லி (ஆழாக்கு)
கடலை மாவு — 3 ஸ்பூன்.
பெரிய வெங்காயம் — 2
மல்லித்தழை — 1 கட்டு
கீரை — 1 கட்டு
பச்சை மிளகாய் — 5
பூண்டு — 3
காரட் — 1 (சுமாரானது!)
உருளைக் கிழங்கு — 1 (பெரியது)
கோஸ் — 50 கிராம்
இஞ்சி — 1 துண்டு (பெரு விரல் அளவு)
சோம்பு — 1 ஸ்பூன்
பட்டை — 1 துண்டு
முட்டை — 1
டால்டா — 1 ஸ்பூன்
கடலை எண்ணெய் — 100 கிராம்
உப்பு — வேண்டிய அளவு

**செய்முறை:**

ஒரு ஸ்பூன் டால்டாவைப் போட்டு மைதா மாவை செந்நிறமாக வறுக்க வேண்டும். உருளைக் கிழங்கை அவித்துத் தோல் உரித்து பிசைந்து வைக்கவும். காரட்டை நன்றாகத் துருவி எடுக்கவும். பட்டை சோம்புவைத் தூள் பண்ணி வைத்துக் கொள்ள வேண்டும்.

பச்சை மிளகாய், வெங்காயம், கோஸ், கீரை மல்லித் தழை இலைகளைப் பொடிப் பொடியாய் நறுக்க வேண்டும். இஞ்சி வெள்ளைப் பூண்டை தோல் எடுத்துவிட்டுப் பொடியாய் நறுக்கிக் கொள்ளவும். நறுக்கி வைத்திருக்கும் பொருட்களோடு காரட் துருவலையும் போட்டு புட்டவியலாய் அவித்து எடுக்கவும்.

முட்டையை நன்றாய் அடித்து அதோடு அவித்து வைத்திருக்கும் பொருட்களையும் போட்டு மைதாமாவு கடலைமாவு உருளைக் கிழங்கு பட்டை சோம்புத் தூள் தேவை யான உப்புப் போட்டுப் பிசைய வேண்டும்.

பின் தோசைக் கல்லை அடுப்பில் காய வைத்து நன்றாய் எண்ணெய் தடவி பக்குவப் படுத்தி வைத்திருக்கும் மாவை வடை அளவு (எண்ணெய் தடவிய இலையில் தட்டித்தட்டி) தோசைக் கல்லில் போட வேண்டும். பக்குவ மானதும் புரட்டிப் போட்டு வெந்த பருவம் பார்த்து எடுக்கவும். நெய்யோ டால் டாவோ தடவியும் சுடலாம். எண்ணெய் ஆகாது. மிகவும் ருசியாக இருக்கும்.

—மிஸஸ். சபன். கோவில்பட்டி.

## ஆறுதல் பரிசு சாப்பாட்டுத் தட்டு

### சத்தான பர்பி

**தேவையான பொருள்கள்**

மைதா — 1 கப்,
வேர்க்கடலை — 1 கப்,
கேழ்வரகு — ஒன்றரை கப்,
டால்டா — 150 கிராம்,
தேங்காய் துருவல் — 1 கப்,
சர்க்கரை — 2 கப்,
ஆரஞ்சுக்கலர் (தேவையானால்) கால் தேக்கரண்டி.

**செய்முறை:**

ராகியை ஊற வைத்து, அரைத்து ஒரு துணியில் கட்டி வடியும் பாலைத் தெளிய வைத்து, தெளிந்த நீரை எடுத்துவிட்டு அடியிலுள்ள மாவை வில்லைகளாகக் காய வைத்து மாவாக இடித்து எடுத்துக் கொள்ளவும்.

மைதாவை லேசாக வறுத்துக் கொள்ளவும். வறுத்த வேர்க்கடலையை மாவாகப் பொடித்து எடுத்துக் கொள்ளவும். தேங்காய்த் துருவலையும் வறுத்துக் கொள்ளவும். ராகி மாவு, மைதா மாவு, வேர்க்கடலை மாவு, தேங்காய்த் துருவல் எல்லாவற்றையும் கலந்து கொள்ளவும்.

சர்க்கரையை ஒரு பாத்திரத்தில் கொட்டி சிறிதளவு தண்ணீர் விட்டு பாகு காய்ச்சிக் கொள்ளவும். சர்க்கரைப் பாகு உருண்டை பதம் வர வேண்டும். அதுசமயம் மாவுக்கலவையைச் சிறிது சிறிதாகத் தூவி கிளறிக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வப்போது சிறிது சிறிதாக டால்டாவையும் கொட்டிக் கிளற வேண்டும். இவையெல்லாம் சேர்ந்து பூத்து வரும் சமயம் இறக்கி ஒரு தட்டில் நெய் தடவி, அதில் கொட்டி, துண்டு போட்டு ஆறியவுடன் எடுக்கலாம்.

—மல்லிகா என். ராஜ், சென்னை—42.



## புடவை ஒரு கவிதை

ரசிகமணி டி. கே. சி. சொன்னது:

ஜெர்மனியிலிருந்து ஆரல்பக்பீ என்ற அறிஞரும், அவரது மனைவியும், தமிழகம் வந்தார்கள். காஞ்சிபுரம் சென்று அங்குள்ள சிற்பங்களைப் பார்த்துவிட்டு ஒரு குளக்கரையில் அமர்ந்தார்கள். மாலை நேரம்.

ஒரு பெண் குளிப்பதற்காகக் குளத்தருகே சென்றாள். அவளைப் பார்த்த ஜெர்மனியன், "தமிழ்நாட்டுத் தையற்கலைஞன் எத்தனை கைதேர்ந்த கலைஞன்! மடிப்பு, மடிப்பாக, எத்தனை தட்டுகள் வைத்து இந்த 'கௌனை' தைத்திருக்கிறான், தையலே தெரியாதவாறு. எத்தனை திறமையான தையல்"... எனப் புகழ்ந்தான்.

சற்று நேரத்தில் அந்தப்பெண் புடவையை அவிழ்த்தாள். ஜெர்மன் தம்பதிகள் திகைத்து விட்டார்கள். மடிப்பு மடிப்பாகத் தைத்துள்ள ஒரு கவுன் என நினைத்தது தவறு. ஒரே நீளமான 16 முழ துணியைத்தான் அப்படி மேனியிலே கலையெழிலோடு உடுத்திருக்கிறாள்" என்பதைப் புரிந்து கொண்ட ஜெர்மனியன், உடனே சொன்னான்:

"அது ஓர் உடை அல்ல, ஒரு கவிதை"

தமிழகத்தை விட்டுப் போவதற்குமுன், அறிஞர் ஆரல்பக்பீ, தமிழ் மக்களுக்கு விடுத்தவேண்டுகோள்:

"மேனாட்டுக்காரர்களாகிய எங்களைப் பின்பற்றி, புதிய பழக்க வழக்கங்களை நீங்கள் மேற்கொள்கிறீர்கள். அதனால் எத்தனையோ பழைமையான இந்திய கலைச் செல்வங்களை இழந்து விட்டீர்கள். ஒன்று மட்டும் உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் கலைகளிலெல்லாம் உயர்ந்த கலை — பெண்கள் புடவையணியும் கலையாகும். நாகரீகமும், கலையெழிலும் இணைந்த அந்த அற்புதமான கவின்கலையை —அந்த "புடவை எனும் கவிதையை" — இழந்து விடாதீர்கள்"

(மீ. ப. சோமு எழுதிய "நமது செல்வம்" என்னும் நூல் விருந்து: அண்ணா. அன்பழகன்.)

# அறுசுவை உணவின் ஆதார சுருதி!



# உஷா

## டபிள்-ரிபைண்ட் கடலை எண்ணெய்



சமையல் கலையில் உங்கள் கைவண்ணம் உயிர் கூட்டம் பெற... உஷா டபிள் ரிபைண்ட் கடலை எண்ணெய். அன்றாடச் சமையலுக்கும், இனிப்பு மற்ற தின்பண்டங்கள் தயாரிக்கச் சிறந்தது. எளிதில் செரிக்கக் கூடியது. இதயத்துக்கு இதமானது.

உஷா—சுத்தம், சுவை, மணம், சிக்கனம். 15 கிலோ டின்களில் கிடைக்கிறது.




தயாரிப்பாளர்கள்:

**B.S.P.**
**ரிஃபைனரீஸ்**
சேலம் 636 009

---

தமிழ்நாட்டில் ஏஜெண்டுகள் இல்லாத இடங்களுக்கு ஏஜெண்டுகள் தேவை.

---

ADWAVE/USHA/2619

மே '84



## கண்ணாடி பாட்டில் குத்துவிளக்கு

**தேவையான பொருட்கள்:**

காலியான பென்சிலின் பாட்டில்கள்-12
உடையாத 'டிஸ்டில்' தண்ணீர் ட்யூப்—2— இது மருந்துக் கடைகளில் விற்கும்.
'ப்ளாஸ்டிக்' பௌடர் டப்பி —2
சிறிய ''ஆரல்டைட்'' ட்யூப் — 1
குஜிலிப் பொட்டு — சிகப்பு — 16

**செய்முறை:**

முதலில் பென்சிலின் பாட்டில்களைச் சுத்தமாகக் கழுவி, நன்றாகத் துடைத்து வைத்துக் கொள்ளவும். படத்தில் உள்ளபடி பௌடர் டப்பியின் அடிப்பாகத்தைக் கவிழ்த்து வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு பென்ஸிலின் பாட்டிலை எடுத்து அதன் அடியில் 'ஆரல் டைட்' பசையைச் சன்னமாகத் தடவி, கவிழ்த்து வைத்த மூடியின் மையத்தில் வைத்துப்பொருத்தவும். அடுத்து, பொருத்தப்பட்ட பாட்டிலின் வாய்ப்புறத்திலும், மற்றொரு பாட்டிலின் வாய்ப்புறத்திலும் சன்னமாகப் பசையைத் தடவி, முதல் பாட்டில் மேலே வைத்துப் பொருத்தவும். மூன்றுவது பாட்டிலின் அடிப்பாகத்தில் இப்போது பசையைத் தடவி, இரண்டாவதன் மேல் வைத்து பொருத்தவும். மூன்றுவதன் வாய்ப் பாகத்தின் மேல், நான்காவது பாட்டிலின் வாய்ப்புறத்தில் பசையைத் தடவிச் சேர்க்கவும். இதேபோல் ஐந்தாவது, ஆறுவது பாட்டில்களையும், நிமிர்த்தியும், கவிழ்த்தும், ஒட்டவும். ஆறுவது பாட்டிலின் மேல் பசையைத் தடவி, பௌடர் டப்பியின் மூடியைத் தலைகீழாக வைத்து, அதன் அடிப்பாகத்திலும் சிறிது பசையைத்தடவி ஒன்றாக மேலே பொருத்தவும். இப்பொழுது மூடியின் நடுவில் பசையைத் தடவி 'டிஸ்டில்' தண்ணீர் ட்யூபைப் பொருத்திவிடவும், சுற்றிலும், குஜிலிப் பொட்டைக் குங்குமப் பொட்டு வைப்பது போல் பசை தடவி ஒட்டி விடவும். இப்போது ஒரு குத்து விளக்கு தயாராகி விட்டது. இதே போல் இரண்டாவதையும் பூர்த்தி செய்து, ஜோடியாக வைத்தால் பார்க்க நன்றாக இருக்கும்.

ஸ்யாமளா ராகவன்.

---

## முந்திரி-சாக்லேட்-டெஸர்ட்!

'ஜில்' ஸ்பெஷல்

**தேவையான பொருட்கள்:**

வெண்ணை — 100 கிராம்,
சர்க்கரை — 100 கிராம்,
குளுக்கோஸ்பிஸ்கெட் ஸ்-100கிராம்'
முந்திரி — 25 கிராம்,
கோகோ — 3 ஸ்பூன்,
ஸ்வீட் ஜரிகை பேப்பர் — ஒன்று
செர்ரி பழங்கள், கிராட்சை — கொஞ்சம்,

**செய்முறை:**

1. முந்திரிகளை உடைத்துப் பவுடராக்கி, குளுகோஸ் பிஸ்கட்டுகளையும் மாவாக்கிக் கொள்ளவும்.
2. வெண்ணையை நன்கு கடைந்து கிரீம் போல செய்து கொண்டு அதில் பவுடராக்கிய சர்க்கரையைச் சிறிது சிறிதாகச் சேர்த்து நன்கு கலந்து கொள்ளவும்.
3. கோகோவையும் சேர்த்து நன்கு அடித்துக் கொள்க.
4. முந்திரிப் பவுடரையும், பிஸ்கெட் பவுடரையும் சேர்க்கவும்.
5. ஒரு சதுரக் கிண்ணத்தை எடுத்து நெய் தடவி ஜரிகைப் பேப்பரை மூன்று பக்கமும் சீராக ஒட்டி விடவும். பிறகு சாக்லேட் கலவையை அதனுள் கொட்டிச் சமப்படுத்தவும்.
6. செர்ரி, கிராட்சைப் பழங்களை மேலே வைத்து அலங்கரிக்கவும்.
7. ஃப்ரிட்ஜில் மூன்று மணிநேரம் வைத்திருந்து கோடை கால டெஸர்ட் டைச் சுவைக்கவும்.

—'மோஹ.'

# கோடையில் தோட்டம்!



வேனிற்காலத்தில், பூச்செடிகளை பாதுகாப்பது எப்படி என்பது பற்றி யுனைடெட் இந்தியா இன்ஷுரன்ஸ் நிறுவனத்தின் மக்கள் தொடர்பு மானேஜரும் தோட்டக் கலையில் அதிக ஈடுபாடு கொண்டவருமான திருமதி. ரேகா ஷெட்டி கூறுகிறார்-

● 'ஏப்ரல், மே ஆகிய இருமாதங்களிலும் வெய்யில் கடுமையாக இருக்கும். ஆதலால், பூந்தொட்டிகளில் வைத்திருக்கும் செடிகளின் மீது வெய்யில் நேராகப் படாமல் நிழலில் — மரத்தின் நிழலிலோ அல்லது ஜன்னல் ஓரங்களிலோ - வைப்பது நல்லது. இதனால் பூக்கள் வெய்யிலில் வாடி வதங்காமல் இருக்கும்.

● இக்காலங்களில் செடிகளுக்கு அதிகாலையில் தண்ணீர் விடுவது நல்லது. நண்பகலிலோ, மாலையிலோ தண்ணீர் விட்டால் அது செடிகளுக்குப் பயன்படாமல் ஆவியாகப் போய் விடும்.

● குரோட்டன்ஸ் மற்றும் அலங்காரச் செடிகளின் இலைகளை கத்தரித்து விடுவது. தண்ணீரைச் சிக்கனமாக செலவு செய்ய உதவும். இப்படிக் கத்தரித்து விடுவதனால் தண்ணீர் ஆவியாக மாறி வீணாவது தடுக்கப் படுகிறது. அநேகமாக வேனிற்காலத்தில் தண்ணீர்ப் பஞ்சம் இருப்பதனால் செடிகளுக்கு எரு போடுவதைத் தவிர்க்கலாம். எரு போடுவதால் அதிகமாகத் தண்ணீர் தேவைப்படும்.

● செடிகளுள்ள மண் களிமண் பூமியாக இருந்தால், இரண்டு நாட்களுக்கொரு முறையும், மணல் தரையாக இருந்தால் தினமும் தண்ணீர் விடுவது நல்லது.

● வெய்யில் காலத்தில் புல் தரையாயிருந்தால் அதைப் பாதுகாப்பது மிகவும் அவசியம். ஏனெனில் மாலைவேளையில் காற்றோட்டமாக அமர வசதியாக இருக்கும். புல்களை தோட்டக்காரன் தயவை நம்பாமல் நாமே அதற்கான மிஷின் வைத்துச் சமப்படுத்தி விட்ட பிறகு, அதில் தண்ணீர் தெளித்து வைத்தால் மிகவும் குளிர்ச்சியாக இருக்கும்.

● வெய்யில் காலத்தில் தண்ணீர் அதிகம் தேவைப்படாத செடி 'போகன் வில்லா' ஒன்றுதான். இதில் நூற்றுக்கணக்கான வகைகள் உள்ளன. முக்கியமாக வெள்ளை, மெஜந்தா, சிகப்பு ஆகியவைகள் அநேகமாக எல்லா வீட்டிலும் காணப்படுபவை.

● ''நான் காலையில் அலுவலகம் செல்வதற்கு முன்பு தோட்டத்திற்குத் தண்ணீர் விட்டுவிடுவேன். தோட்டக்கலையில் மட்டும் ஒரு இன்வால்வ்மென்ட் இருப்பது அவசியம். வெறுமனே இரண்டு பக்கெட் தண்ணீரைச் செடிகளின் மீது ஊற்றி விட்டுச் செல்வது பயன் தராது. என் இரு பையன்களும் காலையில் என்னுடன் ''மம்மி, நானும் செடிக்குத் தண்ணீர் ஊற்றுகிறேன்'' என்று வந்து விடுவார்கள். ''இந்தச் செடி நல்லா வளர்ந்திருக்கு. அந்தச் செடி சிறிது வாடியிருக்கு'' என்று என்னிடம் வந்து கூறுவார்கள். அவர்களுக்குத் தோட்டக்கலையில் உள்ள ஈடுபாட்டைக் கண்டு நான் மகிழ்வதுண்டு. என் கணவரும், தோட்டக்கலையில் உள்ள ஈடுபாட்டை ஊக்குவிப்பார்!

பேட்டி — ஜி. பத்மினி.

# சொல்ல விரும்புகிறோம்!

● என்ன இருந்தாலும், எப்போது பார்த்தாலும் நீர் மாமியார்களுக்கே வரிந்து கட்டிக் கொண்டு செய்திகளை பிரசுரம் செய்கிறீர்கள். அந்த மாமியாரும் ஒரு வீட்டுக்கு மருமகள் என்பதை மறவாதீர்!
எம். ஏ. பாஷா, சின்னசேலம்.

● 'ஆம்பிளைகளுக்கு மட்டும் தான் பெண் பிடிக்கலேன்னு சொல்ற ரைட் உண்டா? நீ சொன்னியே இதனாலே அவங்கம்மாவுக்கு ஹார்ட் அட்டாக்னு. இந்த மனுஷன் பார்த்து விட்டுட்டு வந்தாரே அவாள்ளே எத்தனை பேருக்கு என்னென்ன அட்டாக் வந்திருக்குமோ?' என்ற வரிகள் இன்றைய பெண்களின் நிலையை அப்படியே எடுத்துக் காட்டுகிறது; அதோடு இன்னமும் பெண் சுதந்திரம் ஏற்படவில்லை என்பதும் வெட்ட வெளிச்சமாகிறது.
திருமதி பிரபாடக்கர், விசாகப்பட்டினம்

● 'உணவில் விஷம் உஷார்!' "ராஜி"யின் கட்டுரை எல்லா இல்லத்தரசிகளும் படித்துப் பயன்பெறக் கூடியது.
மயிலை. கோபி, சென்னை—4.

● சில பிரச்சினைகள்; சில வார்த்தைகள் கட்டுரையில் மஞ்சுளா ரமேஷ் அவர்களின் பிரச்சினைகளை அணுகும் முறை, கண்ணோட்டம் அறிவுரைகள் மிகவும் பயன்தரத் தக்கவை. ஆனால் இன்றைய இளைய சமுதாயம் கேட்டுக் கொள்வதில் பொறுமை காட்டுமா?
வசந்தா வாசுதேவன், சென்னை—4.

● இந்தக் கால இளம் திருமதிகளுக்கு ஞானப் பால் ஊட்டியது போல் அமைந்திருந்தது, தாய்ப்பால் கட்டுரை.
திருமதி. தாமரைவாசினி, சென்னை—39.

● "வித்யா ஒரு வித்தியாசமான கேரக்டர். பெண்களை எத்தனை முறை குத்தலாகப் பேசினாலும் பொறுத்திருந்து சுயரூபத்தைத் தக்க சமயத்தில் வெளிக்காட்டும் வித்யா ஒரு முன்னோடி. அருமையான கதை. அதற்கேற்ற முடிவு.
பிருந்தா உமாபதி, சர்க்கார் சாமக்குளம்

● பெண்களுக்கும் சுயசிந்தனை, சுயவிருப்பு, சுயமதிப்பு, சுயபாதிப்பு அனைத்தும் உண்டு என்பதை பிந்து, வித்யா மூலம் ஆண்களுக்கு ஆணித்தரமாக உணர்த்திய 'வையவனின்' குறுநாவல் சிந்திக்க வைத்துவிட்டது.
பத்மாகோபாலன், ஸ்ரீரங்கம்

"பெண்ணுரிமை என்பது என்ன? ஆணுடன் போரிடுவதா? இல்லை. ஆணுடன் இணைந்து வாழ்ந்து அன்பை வளர்ப்பதே பெண்ணின் உரிமைக் கடன். ஆணை அடக்கி ஆள, பெண் நினைப்பது இயற்கை வழி வாழ்வாகாது. இருவரும் ஒத்து வாழ்தலே இன்பமாகும். ஆண், பெண் சேர்ந்ததே வாழ்வு. உடல் நலத்திற்கு எப்படி தட்பம், வெப்பம் இரண்டும் தேவையோ அதுபோல வாழ்வு நலத்திற்கு ஆண்மை, பெண்மை இரண்டும் தேவை.

பெண்கள் தீய எண்ணங்கள் ஊட்டவல்ல போலி நாவல்களைக் கையால் தொடுதலும் ஆகாது. பெண்களை ஒதுக்கிவிட்டு எந்த நாடும் முன்னேற முடியாது. பெண் கண்ணீர் விடும் நாடு — வறுமை நாடு; அடிமை நாடு, அது எரிந்து போகும்.

திரு. எஸ். டி. காசிராஜன் ஐ. ஏ. எஸ் எழுதிய 'திரு.வி.க. நூல் இலக்கியம்' எனும் நூல் விருந்து.



பெண் கண்ணீர் விட்டால்!



# *Visit Temples*

**ALWAYS**

**WITH A PACKET OF**

**BKR**
**PERFUMERY**

## *Scented Bathies*













**VARIETIES TO CHOOSE**

- THALAMPOO
- MULLAIPOO
- ROJAPOO
- LAVENDER
- KADAMBAM
- SUGANDA PRIYA
- AGARBATHIS

TRADE **BKR** PERFUMERY MARK

MEANS
**FLOWERY FRAGRANCE**

PHONE: 25283

*Mfrs:-*
**B·K·R·PERFUMERY**
COIMBATORE-2. (S. INDIA)

Our latest introductions:
**BKR "SANDAL SUPER & SUPRADEEP"**
Incense sticks

# சில பிரச்னைகள்... சில வார்த்தைகள்...

அந்த மெட்டி—

அப்போதைய நாகரிகம் அது. சலங்கை வைத்த மெட்டி! அதை வாங்கிப் போட்டுக் கொள்ள வேண்டுமென்ற ஆசை வனிதாவிற்கு! (பெயர் கற்பனை. ஆனால் சம்பவம் உண்மையானது.) அந்த முப்பது ரூபாய் சமாசாரம், மாதம் பிறந்தால் ஆயிரத்து ஐநூறு ரூபாய் சம்பளம் வாங்கும் அவளால் நினைக்க முடியாதது. காரணம்—

ஒன்றாந்தேதி சாயங்காலம் சம்பளக் கவரை மாமியாரின் கையில்கொடுத்து விட்டுச் சேவிக்க வேண்டும். தொகையில் ஐந்து ரூபாய் குறைந்து விட்டாலும் கண்ணில் விரலை விட்டு ஆட்டி விடுவாள மாமியார். கணவர், அம்மாவின் முதுகுப்புறத்தை விட்டு வெளியே வந்ததே கிடையாது!

அலுவலகத்தில் நண்பிகளின் திருமணமோ, பார்ட்டியோ எதுவானாலும் நாசூக்காக ஒதுங்கி விடுவாள் வனிதா. பலன் 'சரியான கஞ்சூஸ்!' பொண்கூட பொறக்கலே. அதுக்குள்ள மிச்சம் பிடிக்கறதப் பாரு!' என்ற கேலிச் சொற்கள்தான்.

வனிதாவும் அரும்பாடுபட்டு (சில சமயம் காபிக்கு என்று மாமியார் கருணையுடன் கொடுக்கும் சில்லரையையும் சேர்த்து ) முப்பது ரூபாய் சேர்த்து விட்டாள். ஆனால் பரிதாபம்! அதற்குள் அந்த அதிவேக நாகரீகமும் போய், இப்போது போட்டுக்கொண்டால் கேலிதான் மிஞ்சும் என்ற நிலைமைக்கு வந்து—

வாழ்க்கையே வெறுத்து விட்டது அந்த அபலைப் பெண்ணிற்கு! 'குடையை மறந்து விட்டேன்' என்று கூர்க்காவிடம் பொய் சொல்லி விட்டுச் சாயங்காலம் ஆறு மணிக்கு மேல் அலுவலகத்திற்குள் நுழைந்தாள். ஐந்தாவது மாடியிலிருந்து குதித்து உயிரை விட்டாள், அந்த பி. எஸ்ஸி பட்டதாரி!

இப்படிக் கூட நடக்குமா? கேவலம் ஒரு மெட்டிக்காக உயிரை விடுவாளா, நம்ப முடியவில்லையே என்று உதட்டைப் பிதுக்குகிறீர்களா?

இது நடந்த சம்பவம். மெட்டியல்ல அவள் பிரச்னை. அது ஒரு காரணமாக இருந்தது. அவ்வளவுதான். நினைத்துப் பாருங்கள். பட்டம் பெற்ற அந்தப் பெண் தாய் வீட்டில் எப்படி வளர்ந்திருப்பாள்! கல்லூரிக்குப் போகும் செல்வக் குமரி என்பதால் பல சலுகைகள்.

"ராத்திரி ஒரு மணிவரைக்கும் உங்க வீட்டிலே லைட் எரிஞ்சுண்டிருந்தது போலிருக்கே."

"ஆமா கற்பகம். வனிதாவிற்கு ஏதோ மாடல் எக்ஸாமாம். குழந்தை படிச்சுப் படிச்சு இளைச்சே போறா. ரெண்டு தடவை டீ கூடப் போட்டுக்



மஞ்சுளா ரமேஷ்

மே '84



கொடுத்தேன். இப்போ விடிஞ்சது தெரியாமத் தூங்கறு பாவம். மத்தியானம் ஒரு மணிக்குத்தான் எக்ஸாம். அதான் நானும் விட்டுட்டேன். எழுந்தா என்னைத்தான் திட்டுவா ஏம்மா எழுப்பலை படிக்கிறதுக்குன்னு''

குரலில் கர்வம் பொங்கப் பேசும் தாய்மை, கனியக் கனிய சோறூட்டி வளர்க்கும் குடும்பம். 'அம்மாவனிதா' என்று அப்பா கூப்பிடாத நாளே இல்லை. 'டீ' போட்டுப் பேசியது அவளறியாதது.

''வனிதா அதிர்ஷ்டக்காரிதான். பரீட்சை எழுதின கையோட அருமையான வரன் குதிர்ந்துட்டுது. நிச்சயதார்த்தம் அன்னிக்குப் பர்ஸ்ட் கிளாஸ்ல பாஸ் பண்ணுன்னு ரிசல்ட் வந்தது. கல்யாணத்துக்கு இன்னும் பத்து நாள் இல்லை.''

இவள் சொல்லும் 'அருமையான' வரனுக்கு அர்த்தம் என்ன? அம்மா, பிள்ளை ரெண்டு பேர்தான். பிக்கல், பிடுங்கல் இல்லாத குடும்பம். மாதம் ரெண்டாயிரம் சம்பளம், சொந்தவீடு? எல்லாம் சரி! மனநிலை?

அதை யார் பொருட்படுத்தினார்கள் இதழ் விரித்த பூவாகக் கற்பனைகளை விரித்துக் கொண்டு பெண் இருக்கிறதே அது கல்யாணத்திற்குத் தகுதியானதா? நாம் எவ்வளவு தூரம் அவளைப் பக்குவப்படுத்தியிருக்கிறோம்? எப்படிப்பட்ட நிலைக்கும் அவளைத் 'தயார்படுத்தியிருக்கிறோமா?'

'அதெல்லாம் இந்தக் காலத்துப் பெண்கள் பார்த்துக் கொள்வார்கள். அமெரிக்கா வரை தனியாகப் போகிறார்கள். படிச்ச பொண்ணுக்கு இதெல்லாம் சொல்லித் தரணுமா என்ன?' என உற்சாகமாகப் பேசி விடுகிறார்கள். ஆனால் உண்மை நிலை என்ன? அந்தக் காலத்தில் கிராமத்தில் வளர்ந்த பெண்ணிற்கு இருக்கும் மனநிலை கூட இவர்களுக்கு இருப்பதில்லை.

இவர்கள் ஏட்டுப் படிப்பிலே மூழ்கியவர்கள்.

அந்த வனிதா —

திடீரென்று முற்றிலும் புதுமையான சூழ்நிலையில் தன் கோமளக் கனவுகள் எல்லாம் இடிந்து விழ நடுங்கிப் போய் விட்டாள்.

இடுப்பொடிய வேலை செய்யவேண்டியவளானாள் அவள். ஒன்பது மணி வரை நிற்காமல் பம்பரம் போலச் சுற்ற வேண்டும். அடிக்கொருதரம் கடுகடுவென்ற கண்களுடன் அதிகாரம் செய்யும் மாமியார். இவை எதையுமே கண்டுகொள்ளாத கணவன். கையில் பத்து ரூபாய்த் தாள்களுடன் எடுத்ததற்கெல்லாம்சிரித்துக்கொண்டே சினிமா பார்த்த தோழிகளல்ல அலுவலகப் பெண்கள். அவரவர் கவலை அவரவருக்கு. மிஞ்சி யாரிடமாவது தன் கஷ்டத்தைச் சொன்னாலும், 'தன் மாமியார் கொஞ்சம் பரவாயில்லை போலிருக்கே' என்ற ரீதியில் மட்டுமே கேட்டுக் கொள்ளும் பெண்கள். பஸ் சார்ஜுக்குக் கூட கூனிக் குறுகி மாமியாரிடம் கேட்கும் அவலம். பிறந்த வீட்டில் எத்தனை தான் செல்லமாக வளர்த்தாலும் இப்போது பார்க்கும் பார்வையே வேறு.

'மாமியார் வீட்டுக்குப் போனப்புறம் வனிதா ரொம்ப மாறிட்டா. அன்னிக்குப் பூ வாங்கறேன். காசு கொடுக்கவாம்மான்னு கூடக் கேக்கலை. நான்தான் தந்தேன்' இவளுக்குக் கேட்க வேண்டுமென்றே பேசும்அம்மா.

எங்கே போவது? என்ன செய்வது?

ஒரே வழி. பூமியின் ஆகர்ஷண சக்தியையே நம்பினாள். மண்ணுக்கே மாலையாகிப் போனாள். இப்படி இன்று எத்தனை பெண்கள் இல்லை? விழுந்து செத்தால்தானா? மனதளவில் மாண்டு போன பெண்கள் எத்தனையோபேர்.

'என்னவோ குடும்பம், என்னவோ வேலை' என அசுவாரசியமாகக் கழியும் நாட்கள்.

இதற்கெல்லாம் காரணம் கனவுகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையாக நம்முடைய சமுதாயம் இருப்பதுதான். ஆனால் ஒன்று. படித்த, சிந்திக்கும்

# ஆஹா!
# இதோ லியோ வழங்கும் பல புதிய விளையாட்டு பொம்மைகள்... பெருகிவரும் என் பொம்மைகளின் பொக்கிஷம்!

ஆம், நீங்களும் கண்டு களியுங்கள், களிப்பூட்டும் லியோ அணி வரிசையின் புத்தம் புதிய பொம்மைகளே. சாவி முடுக்கினால் ஓடும் அற்புத பொம்மைகள்... பெரிய பெரிய உண்மையான உருவங்களின் சின்னச் சின்ன அசல்கள், தோற்றத்திலே, ஓட்டத்திலே. புல்பேக் கார்டு கார்கள்—கொஞ்சம் பின்னால் இழுத்து விட்டு விடுங்கள். பாருங்கள் அதன் வேகத்தை. என்ன ஆச்சரியம்! புதிய அசல் கார்களின் நுணுக்கங்களைக் கொண்டவை, சிறப்புகளை உடையவை. இதோ தத்தித் தவழும் கண்மணிகளுக்கு இனிமை எழுப்பி கிலுகிலுப்பூட்டும் பொம்மைகள். இந்தியாவிலேயே மற்றவர்களைவிட லியோ முதல் தடவையாக அறிமுகப்படுத்தும் லே-அன்-ஐ. பாட்டரியினால் இயங்கும் அற்புதமான விளையாட்டுகள். குடும்பத்தினர் எல்லோரையும் மகிழ்ச்சியில் திளைக்க வைக்கும் ஆர்வமான பொக்கிஷம்.

இவை யாவற்றையும் தவிர லியோ முன்பே வழங்கியுள்ள துப்பாக்கிகள், மோட்டார் கார்கள், ட்ரக்குகள் மற்றும் விளையாட்டுகள்.

இதுதான் உங்கள் அன்புக் குழந்தைகளின் குதூகலமான உலகம். ஒவ்வொரு கட்டத்திலும் அவர்கள் அடைவதோ குறையாத ஆர்வம், குன்றாத மகிழ்ச்சி. இந்தப் புதிய விளையாட்டுகளிலே புத்தம்புதிய விஷயங்களையும் அவர்கள் கற்கின்றனர்.

எல்லா வயதுக் குழந்தைகளுக்கும் எத்தனையோ வித பொம்மைகள், லியோ படைத்திடும் அற்புதம். கற்பனைக் களஞ்சிய லியோ பொம்மைகள் உங்கள் அன்புக் குழந்தைகளின் கற்பனையைப் பெருக்கும்.

லியோ பொம்மைகள் அழகானவை, உறுதியானவை, பத்திரமானவை. நீங்கள் இதுவரை பார்த்திராத பொம்மைகள்.



ப்ளோ ப்ளாஸ்ட் லிட்.,
எஞ்ஜினியரிங் & ப்ளாஸ்டிக்
ப்ராடக்ட்ஸ் டிவிஷன்,
வி.ஓ.பி. ஹவுஸ், பிரபாதேவி,
பம்பாய் 400 025.

**LEO TOYS**

**லியோ விளையாட்டுப் பொம்மைகள்— உங்கள் அன்பின் அடையாளச் சின்னம்.**

Contour Ads-BP-584 H/83 Tam

மே '84

தெளிவு கொண்ட திருமணமாகாத பெண்கள் (திருமணமானவர்கள் இப்பொழுதாவது சிந்திக்கலாமே!) இதைப் பற்றியெல்லாம் சிந்திக்க வேண்டும்.

ஒவ்வொரு பெண்ணும் ஆத்மபலம் கொண்டவளாக இருக்க வேண்டும். ஐந்து விரல்களும் ஒன்றாக இருப்பதில்லை. என்னதான் கனவுகளைச் சுமந்தாலும், கலகலத்துச் சிரித்தாலும் அவையெல்லாம் நிரந்தரமானவையல்ல பொழுது போக்குகளே. உண்மையான வாழ்க்கை என்பதே வேறு.

எவ்வளவுதான் கல்லூரி வாழ்க்கை இனிமையானதாக இருந்தாலும், பரீட்சை என்று வந்து விட்டால் முட்டி மோதிப் படிக்கிறோமே!

என்னதான் கணவனுடன் உல்லாசமாகப் பொழுது போக்கி, லஞ்ச்டயத்தில் வம்பு பேசிச் சிரித்தாலும், வேலையென்று வரும் போது எத்தனை அரும்பாடு படுகிறோம்?

கல்லூரியிலே எல்லோரும் ஒன்று போலவா இருக்கிறார்கள்? சிலர் சிடுமூஞ்சி லெக்சரர்களாக, சிலர் குழைபவர்களாக, சிலர் நேர்மையே உருவானவர்களாக எத்தனை பேர் இல்லை!

அலுவலகத்திலே நிமிடம் லேட்டானாலும் எரிந்து விழும் மேனேஜர் இல்லை? டைப் அடித்த கடிதத்தில் ஐந்து தப்பு வந்து விட்டது என்று அரை மணி நேரம் கத்தும் 'பாஸ்' இல்லை? அடுத்த சீட்டிற்குப் போய் இரண்டு நிமிடம் பேசி விட்டதற்காக அன்று முழுவதும் விரட்டிக் கொண்டிருக்கும் ஹெட் கிளார்க் இல்லை!

இவர்களோடு எல்லாம் நாம் 'அட்ஜெஸ்ட்' செய்து கொண்டு போவதில்லையா? நமக்குப் பிடிக்கவில்லையென்று கல்லூரியை விட்டு வந்து விடுகிறோமா? நம்மால் முடியவில்லை என்று வேலையை விட்டுவிடுகிறோமா? இல்லையே! எப்படியானாலும் போராடிப் பட்டம் பெறுகிறோம். அத்தனை வளைவு நெளிவுள்ள ஆபீசிலும் ஒன்றுந்தேதி சம்பளம் வாங்கும் போது மனம்பூரிக்கிறோம்.

இதே கொள்கையை ஏன் நம் குடும்பத்திற்கு 'அப்ளை' செய்வதில்லை? நாம் செய்யாத தப்பிற்கு மேனேஜர் கத்தலாம். மாமியார் கத்தக்கூடாதா? வேண்டுமென்றே நான்கு மார்க் லெக்சரர் குறைத்துப் போடலாம். கணவன் நான்கு திட்டு திட்டக் கூடாதா'

'நாங்களென்ன அடிமைகளா' எங்கே போனாலும் இடி தாங்கிகளாகத்தான் இருக்க வேண்டுமா? சந்தோஷமான வாழ்க்கை அமையக் கூடாதா' பெண்ணென்றால் எப்படி எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று போதித்தது போல நீங்களும் அடிமை சாசனம் எழுதிக் கொடுக்கச் சொல்கிறீர்களா'' எனக் கேட்காதீர்கள்.

இடிதாங்கிகளாக, அடிமைகளாக, அடக்கமே உருவானவர்களாகஇருங்கள் என்று சொல்லவில்லை. இரும்பைப் போல உறுதியாகப் பெண்கள் இருக்க வேண்டும் என்றுதான் கூறுகிறேன். நெருப்பிலே காய்ச்சி அடித்தாலும் அது இரும்பாகத்தான் இருக்கிறது. உருகி ஓடி விடுவதில்லை.

வாழ்க்கை நாம் எதிர்பார்த்தபடி பூ மேல் படுக்கையாக இல்லையென்பதற்காகச் சாவைத் தேடி ஓடிவிடுவதோ, விரக்தியோடு வாழ்வதோ அல்ல வாழ்க்கை.

நாம் வாழும் வாழ்க்கை மிகச் சிறிய காலம் கொண்டது. அதிலே சந்தோஷமாக, இன்பமாக, அன்பாக வாழுவோம்.

வாழ்க்கை என்பது மழை, வெயில், காற்று, பனி எனும் அனைத்தும் கலந்ததுதான் அதற்குத் தகுந்த பாதுகாப்பை ஏற்படுத்திக் கொண்டு வாழப் பழக வேண்டுமே தவிர வாழ்க்கையையே விட்டு ஓடிவிடக் கூடாது.

'ஐயோ, எதிர்காலம் எப்படியிருக்குமோ' என எங்கோ இருக்கும் இருட்டைக் கண்டு பயப்படுவதைவிட இப்போது கையிலிருக்கும் விளக்கை நன்கு துடைத்து வைத்துக்கொள்ளுங்கள். மனமெனும் விளக்கு எப்போதும் ஒளிவீசிக் கொண்டிருக்கட்டும். அப்போது எந்த இருட்டிற்கும் அது ஒளி கொடுக்கும்.

இளம் பெண்கள்—

கற்பனையோடு நிஜ வாழ்வையும் தெரிந்து கொள்ளுங்கள்.

வாழ்க்கை—

'அது சந்தோஷமாக வாழ்வதற்கு மட்டுமே.'

என்று பிடிவாதமாக நினையுங்கள். அது போதும் உங்கள் வாழ்வு மலர!

# கொஞ்சு மொழி செல்வம் குறையற்று வாழ்ந்திட

உங்கள் குழந்தைக்கு
போலியோ சொட்டு மருந்து அளித்து
இளம்பிள்ளை வாத நோயிலிருந்து
பாதுகாப்பு அளித்திடுங்கள்.

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ
சொட்டு மருந்தும். ட்ரிபினாண்டிஜெனும்
அளிக்கப்படும் இடம்:




**தமிழ்நாடு தாதா
பார்மாசூடிக்கல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர்
(ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086, தொலைபேசி 810646

ஞாயிறு : காலை 8.30 முதல்
பகல் 12.30 வரை
புதன் : காலை 8.30 முதல்
பகல் 10.30 வரை
சனி : மாலை 3.00 முதல்
6.00 வரை

# எல்லைகளின் விளிம்பில்...

வாஸந்தி

மஞ்சளும் சிவப்புமாக நின்ற க்ளாடியோலிக்களும், டாலியாக்களும் — அவற்றுடன் நிற்கும் இந்த சித்ராவும் சில விநாடிகள் நாவையும் பார்வையையும்கட்டிப் போட்டன. தோளுக்குக் கீழ் அடர்த்தியாகக் கருப்பாக ஸில்க் மாதிரி இறங்கியிருந்த மயிரைத் தலை அசைவினால் பின்புறம் தள்ளி லேசாகப் புன்னகைத்து அவள் ''ஹலோ!'' என்றாள்.

''உங்களுக்குக் குளிருகிறதா? தோட்டத்தில் உட்காரலாமா, இல்லே உள்ளே போகலாமா?''

ஆங்கிலத்தில் கான்வென்ட் வாடை தெரிந்தது.

''தோட்டத்திலேயே உட்காரலாம்'' என்றான் அவன், அதிகம் யோசிக்காமல்.

''இருங்கள், நாற்காலி கொண்டு வருகிறேன்'' என்று அவள் நகர்ந்தாள்.

''லெட் மீ ஹெல்ப் யூ'' என்றபடி அவன் அவள் பின் தொடர்ந்தான்.

அவளுடன் சேர்ந்து நடக்கையில் அவளிடமிருந்து ஒரு மென்மையான லெவண்டர் மணம் வந்தது. அவளது மறுப்பைக் கவனியாதவன் போல் அவளுடன் அவன் நாற்காலியைச் சுமந்து வந்து தோட்டத்தில் போட்டான்.

வெள்ளை உடையில் ஒரு நேபாளி வேலைக்காரன் டீ ட்ரேயை சுமந்துகொண்டு வந்தான். 'டீ பாட்டின் மேல் கம்பளிக் குல்லாய், அமர்ந்திருந்தது. சின்னச் சின்ன பீங்கான் கிண்ணங்களில் முறுக்கும் தட்டையும் இருந்தன.

சித்ரா எழுந்து கிண்ணங்களை அவனிடம் நகர்த்தினாள் புன்னகையுடன். மறுபடியும் மிதந்த தன் பார்வையை அவன் வலுக்கட்டாயமாக இழுத்து ஒரு தட்டையை எடுத்துக் கொண்டான். அரைக்கண் மூடிய



படி நாகநாதன் ஒரு பைப்பைப் புகைத்துக் கொண்டிருந்தார். இவர்கள் தமிழர்கள் என்று சொல்வதற்கு இந்தத் தட்டையும் முறுக்கும் தான் சாட்சி என்று நினைத்து அவனுக்குச் சிரிப்பு வந்தது. அவள் ஆங்கிலத்திலேயே பேசுவதைப் பார்த்து அவனுக்குத் தமிழ் தெரியுமோ தெரியாதோ என்று சந்தேகமாக இருந்தது அவனுக்கு. இந்த நாகநாதன் தான் தமிழ் இலக்கியத்தைப் பற்றித் தன்னை அன்று இன்டர்வியூவில் கேள்வி கேட்டது என்று அவனுக்கு ஞாபகம் வந்தது.

'உமக்கென்னய்யா அருகதை இருக்கு அந்தக் கேள்வியைக் கேக்க?' என்று கேட்க வேண்டும் போல் இருந்தது. தமிழ் தெரிகிறதோ இல்லையோ பெண் என்று நினைத்தவுடன் மனத்தில் தோன்றும் அங்கலட்சணங்கள் அவ்வளவும் இவளிடம் இருக்கின்றன என்கிற சமாதானத்துடன் அவன் அவளைப் பார்த்து, சற்று நன்றாகவே பார்த்து லேசான புன்னகையுடன் கேட்டான்.

''என்ன செய்கிறீர்கள்? படிக்கிறீர்களா? இல்லை, வேலை பார்க்கிறீர்களா?''

''டெக்ஸ்டைல் டிஸைனிங் படிக்கிறேன்.''

''அதற்கப்புறம் வேலை பார்க்கப் போகிறீர்களா?''

''மாட்டாள், மாட்டாள்'' என்று நாகநாதன் குறுக்கிட்டார். ''அவளைப் பார்த்தால் 'டாம்' பாய் மாதிரி இருக்கிறாளே என்று நினைக்காதீர்கள். அவளுக்குக் கல்யாணம் செய்து கொண்டு குழந்தையைப் பெத்துக்கத்தான் ஆசை.''

''ஓ கமான் டாட்!'' என்று கொஞ்சலான குரலில் முணுமுணுத்து அவள் தலையைக் குனிந்த போது அவனுள் லேசான ஒரு ஆச்சரியம் ஏற்பட்டது.

சரசரவென்று இருள் விரிய ஆரம்பித்ததை அறிந்து அவன் எழுந்தான்.

''நா வரேன் ஸார்!'' என்றான் அவன் தமிழில். ''இருங்கள். நான் கொண்டுபோய் விடறேன்'' என்று நாகநாதன் எழுந்தார்.

''வேண்டாம், வேண்டாம். அதுக்கு அவசியமில்லே. தாங்க் யூ வெரி மச்'' என்றான் அவன் அவசரமாக.

நாகநாதன் எழுந்து அவன் கையைக் குலுக்கினார்.



"அடிக்கடி வாருங்கள் மிஸ்டர் பால சந்தர்" என்றாள் சித்ரா.

"என்னை பாலு என்று சிநேகிதர்கள் கூப்பிடுகிறார்கள்!"

அவள் சிரித்தாள். மெத்தென்ற கையை நீட்டினாள்.

"வுட் லைக் டு ஸீ யூ மோர் பாலு!"

"வரேன்!"

பஸ் ஸ்டாப்புக்கு விரைகையில் ஆகாசத்தில் மிதக்கிற மாதிரி இருந்தது. பட்டுப் போன்ற கைஸ்பரிசம் கைக்குள்ளேயே இருந்தது. அவளுடைய மிருதுவான ஸெண்ட் அவனைத் தொடர்ந்து வருகிற மாதிரி பிரமையேற்பட்டது

வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது வாசற் கதவைப் பிடித்தபடி அம்மா நின்றிருந்தாள். அவனைக் கண்டதும் முகத்தின் இறுக்கம் சற்றுத் தளர்ந்த மாதிரி தென்பட்டாள். அம்மாவை நினைத்து ஒரு விநாடி பாவமாக இருந்தது. கவலைப் படுவதில் ஸ்பெஷலைஸ் செய்பவர்கள் இந்த அம்மாக்கள் என்று தனக்குள் சிரித்தபடி ஒரு சின்னப் புன்னகையுடன் அவளைப் பார்த்தான்.

"ஹல்லோ அம்மா!"

அம்மா இதமாகப் புன்னகைத்தாள்.



**சமையல் அறையில் சாமான் வைக்கும் அலமாரியில் பல்லித் தொல்லை இருந்தால் வெங்காயச் செடியின் தண்டுகளைப் போட்டு வையுங்கள். அந்த வாசனைக்குப் பல்லி வரவே வராது. ஆர். விஜு**



"வேலையெல்லாம் எப்படியிருக்கு பாலு?"

"உம். வேலை நிறைய இருக்கும் போல இருக்கு. இனிமேல் தான் பழகணும்."

"உனக்குப் பிடிச்சிருக்கா?"

கேள்வியில் கவலை இழையோடியது. அவன் சிரித்தான்.

"பிடிச்சிருக்கோ, பிடிக்கல்லியோ, தபஸ் பண்ணிக் கிடைச்ச வேலைன்னா இது? வெங்கடாசலபதி ரெகமண்டேஷனோட! பிடிக்கும்படியா பண்ணிண்டுடுவேன். கவலைப் படாதே!"

"அதுதான் சரி!" என்றாள் அம்மா கொஞ்சம் நிம்மதியுடன்.

"உன்னுடைய 'பாஸ்' எல்லாம் எப்படிப் பழகறா?"

"ரொம்ப சிநேகிதமா இருந்தாலும் டேஞ்சர் யார்! ஏமாந்தவன்னு தெரிஞ்சாத் தலையிலே மிளகாயைத் தேய்ச்சுடுவான்னு அம்மா சொல்லுவா!"

அவன் சட்டென்று திரும்பிப் பார்த்தான். மாலு பெரிய புன்னகையுடன் நின்றிருந்தாள். அவளைப் பார்த்ததும் அவனுக்குச் சித்ராவின் ஞாபகம் வந்தது. இவளுக்கும், அவளுக்கும் எத்தனை வித்தியாசம் என்று தோன்றிற்று. இவளுடைய அழகு போதையூட்டாத அழகு — விகல்பமில்லாத தோழமையை ஏற்படுத்தும் அழகு.

"நா ஏமாற மாட்டேன்" என்று சிரித்தபடி அவன் உள்ளே சென்றான்.

அவள் அவனைத் தொடர்ந்தாள்.

"யாரையாவது இன்டரஸ்டிங்கா பார்த்தியா?"

இவளிடம் எதையும் சொல்லாமலிருக்க முடியாது என்ற நினைப்புடன் அவன் சிரித்துக் கொண்டே சொன்னான்.

"பார்த்தேன். ஒரு பெண்ணை!"

அவள் லேசாக விசிலடித்தாள்.

"யாரு?"

"பெயர் சித்ரா. டாட்டர் ஆஃப் நாகநாதன் ஐ. ஏ. எஸ்!"

"ஓ. அவளா?"

"தெரியுமா அவளை?"

"பார்த்திருக்கேன் யூனிவர்சிடியிலே. ஸோபியாலாரன்னு நினைப்பு அவளுக்கு!"

அவன் ஏதும் பதில் சொல்லாமல் சிரித்தான். சித்ரா அப்படிப் பெருமைப் பட்டுக் கொண்டால் அது ரொம்ப நியாயமானது என்று நினைத்துக் கொண்டான். அந்த மாதிரி ஒரு உடம்பைக் கொண்ட பெண்ணைப் பார்த்து மற்ற பெண்களுக்குப் பொறாமை ஏற்பட்டால் அது ரொம்ப இயற்கையானது என்று தோன்றிற்று.

"அவ அங்கே வேலை பார்க்கிறாளா?"

"இல்லே. அவ அப்பா அந்தக் கம்பெனிக்கு எந்த வகையிலோ அட்வைஸர். எந்த வகையிலேன்னு எனக்குச் சரியாப் புரியல்லே. அவர் தன் வீட்டுக்கு அழைச்சுண்டு போனார். அங்கே அவளை பார்த்தேன். தமிழே தெரியாது போலிருக்கு அவளுக்கு! ஆறு முறுக்கும் தட்டையும் கொரிக்கிறது. அதோட பெயர் கூட அவளுக்குத் தெரியுமான்னு எனக்குச் சந்தேகம்!"

"வாங்கியிருப்பா. நம்ம அம்மா மாதிரி அவ வீட்டிலே செஞ்சுண்டிருப்பாளா? சரியான ப்யூரோக்ராட் அவ! ஐ.ஏ.எஸ் லெவல்லே தான் பழகுவா! அதுக்குக்கீழே இருக்கிற யாரும் லட்சியமில்லே!"

மாலு ரொம்பக் கடுமையாக விமர்சிக்கிறாள் என்று அவன் நினைத்துக்கொண்டான்.

"ஓ கமான் மாலு — தட் இஸ் டூ மச்!"

மாலு தோளைக் குலுக்கினாள்.

"அவளைப் பத்தின பொதுவான அபிப்பிராயத்தைச் சொன்னேன். ஆறு பாய்ஸ் கிட்டே அவ ரொம்பப் பாப்புலர். தெ கோ க்ரேஸி ஓவர் ஹர்!"

அவனுக்கு மறுபடியும் சித்ராவின் மதர்த்த உடல் நினைவிற்கு வந்தது. மிதக்கும் மார்பகங்கள் கண்ணுக்குள் நின்றன. அவன் சட்டென்று சமாளித்துக் கொண்டு கழற்றிய ஷூவை ஓரமாக நகர்த்திவிட்டு எழுந்தான்.

(தொடரும்)



சின்னஞ்சிறு காயத்தில்கூட அழுக்குப் புகுந்துவிடும்
இதனால் காயம் பெரிதாகும், கஷ்டம் உருவாகும்.

# உடனடியாக பாண்ட்-எய்ட் உபயோகியுங்கள்

உலகில் உள்ள தாய்மார்கள் நம்புவது பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்—அது. காயங்களில் அழுக்குப் புகாமலும், தொற்றிலிருந்தும் காயங்களைப் பாதுகாக்கிறது.

ஆகவேதான் பாண்ட்-எய்ட் முழுப் பாதுகாப்பானதாகும்; பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்கில் உள்ள நிரூபணமான ஆன்டிஸெப்டிக், காயத்தை ஆற்றுவதற்கு உதவுகிறது. அதிலுள்ள நுண்துளைகள் காயங்களை விரைந்தாற்றிட உதவுகின்றன. ஒட்டிக்கொள்ளாத வசதிமிக்க ஒப்பற்ற அடுக்கு.

காயங்களின் வெவ்வேறு வடிவம் மற்றும் அளவுகளுக்கு ஏற்ப வருகின்றன பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள். பெரிய புண்கள், சிறிய வெட்டுக் காயங்கள், கட்டுப்போட முடியாத இடங்கள், கொப்புளம் மற்றும் சிராய்ப்புகளுக்கு எப்போதும் உங்கள் கைவசமிருக்கட்டும் பாண்ட்-எய்ட் டிரஸ்ஸிங்குகள்.




**கைவசம் வைத்திருங்கள் பாண்ட்-எய்ட்**
**ஏனென்றால், காயங்கள் எங்கும் எந்நேரமும் ஏற்படலாம்.**

Johnson & Johnson

OBM/2514/TM

மே'84

# ராசி பலன்

மே-'84



**மேஷம்**

மிகவும் துரிதமாக வேலை செய்ய வேண்டிய மாதமிது. அலுவலகத்தில் அதிக வேலைகள் குவிவதுடன் பொறுப்பும் அதிகம். அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களில் சிலருக்கு வெளியூர் மாற்றங்களும், பதவி உயர்வும் கிடைக்கும். குடும்பத்தாருடன் சிறிய பிரயாணங்களும், பெரியவர்களின் சந்திப்பும் ஏற்படும். எதிர்பாராத விதமாகக் கணிசமான பணத்தொகையும் கிடைக்கும். குடும்பத்தாரிடையே சுமுகமான நிலை நிலவும்.

**ரிஷபம்**



மற்றவர்களுடன் ஒத்துழைத்து நடப்பீர்களானால் திட்டமிட்டிருந்த கடினமான வேலைகளும் எளிதாகும். வீட்டில் இதுவரை இருந்த மனஸ்தாபங்களும் நீங்கி ஒற்றுமை ஏற்படுவதுடன், எதிர்காலத் திட்டங்கள் வகுக்கவும் சிறந்த மாதமிது. சிலருக்கு அரசாங்க ஆதரவும், பணவரவும் உண்டாகும். குடும்பத்தில் சுபகாரியத்தின் பொருட்டு பல புதிய மனிதர்களின் சந்திப்பும், நண்பர்களின் கூட்டுறவும் உண்டாகும். ஓரளவு பணச்செலவு மிகுந்த மாதமாகவே இருக்கும்.



**மிதுனம்**

பொது வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஒரு நல்ல திருப்பத்தை அளிக்கும் மாதமிது. இருக்கும் இடத்திலேயே நல்ல பெயரையும், புகழையும் அளிப்பதுடன் பொது மக்களின் ஆதரவும் உண்டாகும். இதுநாள் வரை இருந்து வந்த கிலேசங்களும், தயக்கங்களும் மாறி உற்சாகமும், உத்வேகமும் உண்டாகும். இதனால் எடுத்த காரியங்கள் வெற்றி பெறுவதுடன் கீர்த்தியும் கிடைக்கும். பணவரவு சுமாராக இருக்கும்.

**கடகம்**



காரியசித்தி ஏற்பட எங்காவது தாமதமானால் துணிச்சலுடன் செயல்பட வேண்டிய நாட்கள் இவை. நல்ல கற்பனா சக்தியும், புதிய முயற்சிகளில் ஆர்வமும் உள்ள நீங்கள் திட்டமிட்ட காரியங்கள் ஒவ்வொன்றாக நிறைவேறும் நாட்கள் இவை. பொறுமையும், விடாமுயற்சியும், நண்பர்களை அரவணைத்துச் செல்லும் திறத்தையும் வளர்த்துக்கொண்டால் உங்களுக்கு வளமான எதிர்காலம் நிச்சயம்.



**சிம்மம்**

உங்களைச் சுற்றியுள்ள நண்பர் அல்லது உறவினரின் மூலமாக அதிர்ஷ்டம் உங்களைத் தேடி வரவிருக்கிறது. சமயத்தில் பயன்படுத்திக் கொண்டீர்களானால் வளமான எதிர்காலம் உங்களுக்காகக் காத்திருக்கிறது. உங்களைப் பொறுத்தவரை வெற்றியை அடையுமுன் தடைக்கற்களும், பிரச்னைகளும் அதிகமாகவே இருக்கும். தன்னம்பிக்கையுடனும், தைரியத்துடனும் போராடினீர்களானால் இறுதி வெற்றி உங்களுடையதாகவே இருக்கும்.

**கன்னி**



மிகவும் முன்ஜாக்கிரதையும், சமயோசிதபுத்தியும் கொண்ட நீங்கள் பெரிய சாதனைகளைச் செய்யத் துவங்குவீர்கள். வீடு, நிலங்களின் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் பெரிய அளவில் லாபம் கிடைக்கும். உங்களுடைய வெற்றிகளுக்குக் குடும்பத்தின் உறுதுணை தேவையானால் தயங்காமல் சேருங்கள். மனவேறுபாடுகள் மறைந்து சௌஜன்யம்

நிலவும் காலமிது. குழந்தைகளினாலும் மனசந்துஷ்டியும், புகழும் உண்டாகும்.

## துலாம்



நீண்ட நாட்களாக நீங்கள் நிறைவேற்றி வந்த கடமைகளின் பளு குறைய ஆரம்பிக்கும் காலமிது. ஓரளவு பொழுது போக்குகள் நிறைந்த மாதமாக இருக்கும். நண்பர்களிடையே அதிகம் நெருக்கம் கொண்டாடாமல் இருப்பது நல்லது. அதனால் பணச்செலவையும், மனஸ்தாபத்தையும் ஏற்படுத்திக் கொள்ளாமல் இருக்கலாம். குடும்பத்தாரிடையே நிகழும் சுபநிகழ்ச்சிகளின் காரணமாக ஓரளவு மனவேறுபாடு உண்டாகலாம். அதிகம் விவாதத்தில் ஈடுபடாமல் இருப்பது நல்லது.

## விருச்சிகம்



நண்பர்களுடன் (அ) உறவினர்களுடன் வெளியூர்ப் பிரயாணங்களும் மகிழ்ச்சிகரமான உல்லாசப் பயணங்களும் உண்டாகலாம். சமீபகாலமாக இருந்து வந்த பணக்கஷ்டங்களும், அந்தரங்க வாழ்க்கையின் வருத்தங்களும் படிப்படியாகக் குறைய ஆரம்பித்து விடும். மனத்துக்கு அண்மையானவரிடமிருந்து மகிழ்ச்சிகரமான செய்திகள் கிடைக்கும். எதிர்பாராத வகையில் பணவரவும் ஏற்படலாம். உடல்நிலை ஓரளவு பாதிக்கப்பட்டு விரைவில் தேறும்.

## தனுசு



வீட்டிலோ, அலுவலகத்திலோ சிறிய சச்சரவுகளும், மனஸ்தாபங்களும் உண்டானாலும் விரைவில் அவர்களை உங்கள் பக்கம் திருப்பிவிடுவீர்கள். இறந்த மனத்துடன் உதவும் மனப்பான்மையும் கொண்ட நீங்கள் சில காரியங்களுக்கு உத்திரவாதம் தரவேண்டிய கட்டாயமும் ஏற்படலாம். உறவினர் ஒருவரால் பணச்செலவு ஏற்படுவதுடன் ஓரளவு வாழ்க்கையில் சகஜ நிலையும் பாதிக்கப்படும்.

## மகரம்



உங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதில் நீங்கள் கவனமாக இருக்க வேண்டிய மாதமிது. பதவி உயர்வோ, பணவரவோ, ஏதோவொன்று, உங்களைத் தாண்டிச் செல்லும்படியான நிகழ்ச்சிகள் நடைபெறலாம். விடாமுயற்சியும், தன்னம்பிக்கையும் உங்களுடைய திட்டங்களை நிறைவேற்றும். அன்றன்று நடக்கும் நிகழ்ச்சிகளை உங்களுக்கு நெருங்கியவரிடம் கலந்தாலோசிப்பது நல்லது.

## கும்பம்



நீங்கள் திட்டமிட்டிருந்த புதிய முயற்சிகளில் இறங்குவதற்கு உகந்த மாதமிது. தனியார்த் துறையில் இருப்பவர்களுக்கு வெளியூர்ப் பிரயாணங்களினால் லாபமுண்டாகும். நீதிமன்ற வழக்குகளில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு நண்பர்களின் உதவியால் ஓரளவு நிவாரணம் கிட்டும். குடும்ப நபர்களிடையே விலகியிருந்த ஒருவரின் மூலமாகத் திடீர்ப் பணவரவு உண்டாவதுடன் சுபசகுனங்கள் கிட்டும். குழந்தைகளினால் செலவு அதிகரிக்கும் மாதமிது.

## மீனம்



பொழுது போக்கிற்கும், நண்பர்களின் கூட்டுறவிற்கும் உகந்த மாதமிது. அன்றாடக் கடமைகளைத் தவிர வரவிருக்கும் கூடுதல் பொறுப்பிற்கும் உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டியதாக இருக்கும். வெளிநாட்டிலிருந்து சுபச்செய்திகளை எதிர்பார்த்திருப்பவருக்கு இம்மாதத்தின் மூன்றாவது வாரத்தில் எதிர்பார்த்த செய்திகள் கிட்டும். பணவரவு சரளமானதாக இருக்கும். குடும்பத்தில் சுபநிகழ்ச்சிகள் ஏற்படும்.

# ஸ்ரீமாதா

**தே**வரிஷிகளுக்கு அம்பிகை விடை கொடுத்து அனுப்பியதாகச் சொன்னோம். எங்கே அனுப்பினாள்? தேவர்களை தேவ லோகத்துக்கும் ரிஷிகளை ஆரண்யங்களுக்கும் குகைகளுக்குமா? தேவ லோகத்தில்தான் தேவர்கள் புக முடியாதபடி பண்டன் ஆக்கிரமிப்புச் செய்திருக்கிறானே! ரிஷிகள் நிச்சிந்தையாக தியானமும் தவமும் புரிய முடியாதபடி அடர்ந்த ஆரண்யங்களிலும், இருண்ட குகைகளிலும் கூட, அல்லவா அசுரரின் ஆக்ரமம் ஏற்பட்டிருந்தது? நிம்மதியின்றி, நிலையின்றித் திரிபுவனங்களிலும் அவர்கள் திரியும்படித்தான் திரிபுரை அவர்களை விட்டு விட்டாள். ஆம், இன்னும் சிறிது காலம் அவர்கள் அப்படித் திரிவதே தேவர் தருக்குற்றுச் செய்த முன்வினையைக் கழித்துக் கொள்ள உதவும். சகல உயிரினங்களின் பாபங்களையும் ஏற்றுக் கழுவாய் செய்யும் ரிஷிகள் மேலும் சில காலம் துயருறுவதே லோகத்தின் தோஷம் நீங்கத் துணை செய்யும்.

அவளை அறவே நீங்க அவர்களுக்கு எப்படி மனம் வரும்? தங்களின் ஒவ்வோர் அம்சத்தை அவளது ஸந்நிதியில் வைத்து விட்டே அமரரும் முனிவரும் விடைகொண்டனர்.

அவுணரிடம் சிக்காமலிருக்க அவர்கள் அலைந்து, திரிந்து, உலைந்து தடுமாறலாயினர். இனி கருணை அஸ்திரத்தைப் பலமாகவே பிரயோகித்துக் கர்மாவை அழிக்க வேண்டியதுதான் ஏ ன்று அன்னையும் தீர்மானித்தாள். எதற்காக அவள் அவதரித்தாளோ அந்த பண்டாஸுர வதத்தைச் செய்வதற்காகப் புறப்பட்டாள். லலிதை என்றே பெயர் கொண்ட அதிகோமள மெல்லியலாள் வீறு கொண்ட வீராங்கனையாகப் போர்க்கோலம் பூண்டாள்.

பண்டன் தன் தோள்களைத் தட்டி விசுக்ருஷ, விஷங்கன் என்ற இரு தம்பிமாரைப் படைத்துக் கொண்டானென முன்பே கண்டோமல்லவா? அவர்களோடு தூமினி என்ற புகைமகளையும் தனக்குத் தங்கையாகப் படைத்துக் கொண்டு அவள் பெற்ற பிள்ளைகளையும் தானே போர்க்கலையில் பயிற்றுவித்தான். தனக்கென்றே பண்டன் நான்கு மனைவிமாரிடம் முப்பது ஆண்மக்களைப் பெற்றுக் கொண்டதும் நினைவிருக்கலாம்.

இதேபோல் அம்பாளும் இப்போது தனக்கு உதவியாளர்களைப் படைத்துக் கொண்டாள். எவரிடமும் உள்ள எந்தசக்தியும் அவள் போட்ட பிச்சைதான்: அப்படியிருக்க அந்த மஹா சக்திக்கு உதவியாளர் எதற்கு என்று தோன்றலாம். ஆனால் லீலா நாடகம் ருசிப்பதற்கு இதெல்லாம் அங்கம். திருமால், சிவபெருமான் முதலிய எந்த தெய்வத்தை முழுமுதற் கடவுளாக போற்றும் புராணமாயினும் சரி, அது அந்த முழு முதற் கடவுள் இவ்வாறு



பரிவாரங்களின் துணை கொண்டே நியசக்திரனைப் பரிபவமுறச் செய்ததாகத் தான் கூறும். தலைவன் எப்படி நடக்க வேண்டும், அத்தலைமையை ஏற்ற தாஸர்கள் எவ்விதம் ஒழுக வேண்டும் என்பதற்கு லக்ஷ்ய நிலையை உலகுக்குக் காட்டவே இந்த நாடக அங்கம்.



நம் தொடரில் இந்தஅத் தியாயம் மிகவும் பாக்கியம் செய்தது. பிற்காலத்தில், காஞ்சிபுரத்திலே காமாக்ஷியாகக் குடி கொண்ட ராஜ ராஜேச்வரியான ஸ்ரீமாதாவின் உதவியாளர்களை அறிமுகம் செய்கையில் ஆலவாயின் அமுதாகிய அங்கையற் கண்ணி, ஆனைக்காவின் ஆருயிரான அகிலாண்டேச்வரி ஆகிய இரு மாதாக்களின் ஆதி ரூபத்தையும் தரிசிப்பிக்கும் பாக்கியம் இதற்குக் கிட்டுகிறது. இவ்விரு தாயாருக்கும் முன்னதாக ஒரு குழந்தையைச் சொல்ல வேண்டும்.

ஆம், அம்பாள் படைத்துக் கொண்ட பணியாளரில் அதிமுக்கியமானவள் பாலா. த்ரிபுரசுந்தரியான ஸ்ரீ லலிதாம்பிகையின் மகளாக இவள் பேசப்படுவாள். ஆயினும் அன்னையுடனேயே ஒருமைப்படுத்தி பாலா த்ரிபுரஸுந்தரி என்றே அவளைச் சொல்வார்கள். லலிதா மஹா த்ரிபுரஸுந்தரியைச் சக்ரவர்த்தினி எனில் பாலா த்ரிபுரஸுந்தரியைப் பட்டத்து இளவரசி என்று கூற வேண்டும் — அப்படித்தான் அவளை நம் புராணம் ''பர்த்ருதாரிகா'' என்று குறிப்பிடுகிறது. லலிதை தோன்றும்போதே பதினெட்டுப் பிராய நங்கை நல்லாளாகத் தோன்றி அதன்பின் மூவாதிருந்த சிருங்கார நாயகி எனில், பாலையோ தோன்றும்போதே ஒன்பது வயதுச் சிறுமியாகத் தோன்றி, இரு பொருளிலும் என்றும் ''நவ''மாக நல்லருள் புரியும் பிரம்மசர்ய ரூபிணி. சிறுமி என்பதாலேயே பாலா எனப் பெயர். ஆனால் ஆற்றலிலோ அன்னைக்குச் சளைத்தவளல்ல. அன்னையின் மந்திரம் ஸ்ரீவித்யா என்று பிரஸித்தி பெற்றதல்லவா? மகளுடைய மந்திரமும் ''ஸ்ரீவித்யா பாலா'' என்றே தலைமேற்கொண்டு போற்றப்படுகிறது.

லலிதை போலவே பாலையும் செக்கச் சிவந்தவள். தனது ஒளிக்கதிர்களால் திக்கு சனையெல்லாம் செப்பில் நிரப்புபவள் என்று இவளைக் குறித்த த்யானச் சுலோகம் கூறும். ஆயினும் அன்னை காமனுக்குரிய கரும்பு வில்லையும் புஷ்பபாணங்களையும் கைக்கொண்டிருக்க, மகளோ ஞான மூர்த்தியாக ஜப மாலையும் புத்தகமும் கரங்களில் தரித்து விளங்குகிறாள்; 'வித்யா' என்றவுடனேயே பொதுவில் நினைக்கப்படும் ஸரஸ்வதியை ஞாபகமூட்டுகிறாள். மற்ற இரு கரங்களில் அன்னை பாச — அங்குசங்களைக்கொண்டுகட்டிப்போட்டு அடக்கும் அதிகாரத்தைக்காட்ட மகள் பாலையோ அபயமும் வரதமும் சாதித்து அன்பு நெஞ்சைக்காட்டுகிறாள்.

விசித்திரம் என்ன சொல்ல? சிருங்காரமூர்த்திக்கா ஞான ரூபிணி பிறக்கிறாள்? அதிகார

மூர்த்திக்கா அன்புருவள் மகளானாள்?

அப்படியல்ல. சிருங்கார மூர்த்தியாகத் தோன்றினால்தான் உலகம் அவளிடம் திரும்பும். இப்படி வேஷம் போட்டு உலகைத் தன்னிடம் திருப்பிக் கொண்டபின் அவளே மெல்ல மெல்லப் பக்குவம் செய்து அதற்கு ஞானத்தைப் பிறப்பிப்பாள். ஞானபாலை அவளிடம் பிறப்பதன் மர்மம் இதுதான். சிருங்கார தேவதையாய் உள்ளபோது லோக வாழ்வில் அதியாக ஓடிவிடாமல் நெறிமுறைகளைக் காப்பதற்காகக் கட்டிப்போட்டு அடக்கி அதிகாரத்தைக் காட்ட வேண்டியிருக்கிறது. இதிலே பக்குவம் பெற்று ஞான வழிக்குத் தயாராகி விட்டவர்களிடமோ அபய வரதம் பாலித்து அன்பு செய்தாலே போதுமானதாகிறது — ஸம்ஸார பீதியை நீக்கும் அபயம்; தன்னையே அடியாருக்குத் தந்து கொள்ளும் வரம்.

விந்தையாக, லலிதோபாக்யானத்தில் பாலை ஆவிர்பவித்தது பற்றி இந்த கட்டத்தில் ஏதும் கூறப்படவில்லை. இதர பரிவாரங்களின் உற்பவம் மட்டுமே கூறப்படுகிறது. பிற்பாடு யுத்தத்தில் பண்டனின் புத்திரர்கள் படையெடுத்து வரும் கட்டத்தில் தான் திடுமென பாலாவைப் பற்றிய பிரஸ்தாபம் வருகிறது. அப்போதும் அவள் எப்படித் தோன்றினாள் என்பது பற்றி எதுவுமே சொல்லப்படவில்லை. "பண்ட புத்ரரின் வீர கர்ஜனை கேட்டு பாலா குதூகலம் அடைந்தாள்" என்று முதல் முறையாக அவள் பெயரைச் சொல்லி அவளை, "லலிதாதேவியின் குமாரி: அன்னையின் பக்கலிலேயே உறைபவள்; சக்தி கணம் யாவற்றாலும் பூஜிக்கப்படும் பராக்ரமசாலினி. லலிதைக்கு ஈடானவள்; லலிதையின் வெளியே சஞ்சரிக்கும் மூச்சுக் காற்றுப் போன்றவள் (அத்தனை அருமை!) முக்கண்ணியான அன்னையின் நான்காவது கண்ணானவள் (ஆம், கண்மணி தான்!)" என்று மட்டுமே அறிமுகம் நடக்கிறது. காமேச்வரியின் குமாரி என்ற போதிலும் காமேச்வரனிடம் அன்னை அவளை ஈன்றதாக எங்குமே குறிப்பில்லை. ஏனைய பரிவாரமனைத்தையும் அன்னை, அப்பனின் சேர்க்கையின்றித் தானொருத்தியே படைத்து விட்டதைப் போலவே பாலையையும் தோற்றுவித்திருக்கக் கூடுமென்று எண்ணும்படி உள்ளது.

> **வடைக்கு மாவு அரைக்கும் போது தண்ணீர் சிறிது அதிகமாகிவிட்டால் ஒரு தேக்கரண்டி நெய் விடுங்கள். மாவு இறுகும்.**
> **-பரமேஸ்வரி**

ஸ்ரீராமனுக்குக் கோதண்டம் போல் ஸ்ரீ ராஜராஜேச்வரிக்கு முக்கியமானது கரும்புவில். அந்த வில்லிலிருந்து 'மந்த்ரிணி' என்ற தனது அமைச்சரைப் படைத்துக் கொண்டாள் அரசி. மதுரக் கரும்பிலிருந்து தோன்றிய மந்திரிணியே பிற்காலத்தில் மதுராபுரி மஹா நாயகியான மீனாம்பிகையாய் அவதரித்தாளென்பார்கள். இடையே மாதங்கி என்ற திருநாமத்தில் மதங்க முனிவருக்கு மகவாய் வந்திருக்கிறாள். தச மஹா வித்யைகள் என்று சிறப்பிக்கப்படும் பத்துப் பெரும் சக்திகளில் மாதங்கி ஒருத்தி. அமைச்சர் என்றதால் இவள் ராணிக்குக் குறைந்தவளென எண்ணிவிடலாகாதென்றே, இவளுக்கு **ராஜ** மாதங்கி என்றும் **ராஜ** ச்யாமளா என்றும் திருநாமங்கள் கூறப்படுகின்றன. பச்சைப்பசேலென்றும் சியாம வர்ணம் வீசுவதால் மரகத மீனாக்ஷி என்றே சொல்கிறோமல்லவா? லலிதையின் செஞ்ஜோதியே இங்கே குளிர்ச்சியாக, வளமையின் வளர்ச்சியாகப் பச்சைக் காந்தி வீசுகிறது. லலிதையின் சிருங்காரப்பாலையின் ஞானம் இரண்டும் கலந்து உருவானவளிவள். இவள்தான் ஸங்கீத தேவதை. இவளைக் குறித்தே எழுந்த பிரக்யாதி பெற்ற 'ச்யாமளா தண்டகம்' கூறுவது போல மாணிக்கவீணை தரித்து நிற்கிறாள். இசை வடிவான இனிமையும் கரத்தே தாங்குகிறாள். இசையால் ஜீவனைச் சிற்றின்பச் சிருங்காரத்திலும் ஆழ்த்தலாம், பேரின்பப் பெருஞானத்திலும் உயர்த்தலாமல்லவா?

இவளுக்கும் அரசியான லலிதைக்கும் ஏற்றத் தாழ்வே இல்லை என்பதால்தான் 'ச்யாமளா தண்டகம்' இரண்டாம் ச்லோகத்தில் இவளைக் கரும்புவில் முதலான நான்கு ஆயுதங்கள் கொண்ட சந்திரசேகரியான லலிதையாகவே வர்ணித்திருக்கிறது.

லலிதைக்கு உரிய ராஜ முத்திரையான மோதிரத்தை அவளையன்றிப் பெற்ற ஒரே ஒருத்தி மந்த்ரிணிதான் என நம் உபாக்யானம் கூறுகிறது. இதனால் 'முத்ரேச்வரி' என்றும் இவளுக்கு ஒரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. 'இவளிடமே ஆட்சிப்பொறுப்பை' எல்லாம் மஹாத்ரிபுரஸுந்தரி விட்டிருந்தாள் என்பதை "மந்த்ரிணீ ந்யஸ்த ராஜ்ய துரா:" என்று ஸஹஸ்ரநாமமும் நவில்கிறது.

காமேச்வரியான அந்த ராணிக்கு உரிய ஸ்ரீசக்ரம் போல மந்த்ரிணிக்கு உரிய சக்கரத்தில் (யந்திரத்தில்) தான் மூன்றாவது வரிசையில் காமராஜன், மகரத்வஜன் முதலான எல்லா மன்மதர்களும் இடம் கொள்கிறார்களென்பதும் இவ்விருவரின் ஒற்றுமையைக் காட்டுவதாகும். காமேச்வரி போலவே திருமாலால் சிவனுக்குக் கன்யாதானம் செய்விக்கப் பெற்ற பெருமையும் மீனாம்பிகைக்கு இருக்கிறது!

நிறத்தால் பசுமையையும், இசையால் இனிமையையும் பரப்பும் மந்த்ரிணி அன்பால் அனைவரையும் வசமாக்கிக் கொள்பவள் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? நாமும் இவ்வாறே மூவுலகையும் அன்பால் வெல்லுவதற்கு வழியாக இவளது பதினாறு நாமங்களை செப்பினாலே போதும் என்கிறது புராணம். நவிலும் போதே நாவினிக்கும் நாமங்கள்; ஸங்கீத யோகினி, சியாமா, சியாமளா, மந்த்ர (அல்லது மந்த்ரி) நாயிகா, மந்த்ரிணி,

# இதோ எளிதில் உபயோகிக்கக்கூடிய ஒரு ஹேர்-டை, மிகமிகக் குறைந்த விலையில்!



கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!




இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர்-டை இது ஒன்றே.

**Godrej**
## பவுடர் ஹேர்-டை
கான்ஸென்ட்ரேட்

CLARIAN/GS/11/203 TAM

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

ஸசிவேசானி ('ஸசிவ' என்றாலும் அமைச்சர் என்றே பொருள்) பிரதானேசி, சுகப்ரியா (இனியைக் கொஞ்சுபவள்), வீணாவதி, வைணிகி (இதற்கும் வீணாகானம் செய்பவளென்றே பொருள்), முத்ரிணி, ப்ரியகப்ரியா ('ப்ரியகம்' என்னும் கடம்ப விருக்ஷத்தில் பிரியமுள்ளவள். மீனாக்ஷியைக் கதம்பவன வாஸினி என்கிறோமல்லவா?), நீபப்ரியா நீபம் என்றாலும் கடம்பம்தான்), கதம்பேசி, கதம்பவனவாஸினி, ஸதாமதா.

(எப்போதும் அன்பே மத நீராகப் பெருக ஆனந்த மதுவைப் பருகிக் கொண்டிருப்பதால் ''ஸதாமதா.'')

ஆஹா! லலிதோபாக்யானம் தான் தினுசு தினுசாக எத்தனை தேவி ரூபங்களை நமக்கு தரிசனம் செய்து வைக்கிறது! ஸௌந்தர்யமயமான த்ரிபுரஸுந்தரி, பாவன பரிசுத்தையாக ஓர் பாலா, மாதுர்ய மநோஹரமாக மந்த்ரிணி. இனி, உக்ரவீரமான தண்டநாதா.

அரசி லலிதைக்கு இளவரசி பாலா, அமைச்சர் மந்த்ரிணியெனில் சேநாபதி தான் தண்டநாதையாகிய தண்டினி.

காமேச்வரியின் மலரம்புகளிலிருந்தே இந்த உக்ரவீர்யை பிறந்தாளென்று காண்கிறோம். சேராததையெல்லாம் சேர்த்துக் கொட்டும் பராசக்தியின் சதுரத்துக்குச் சான்று!

இதுகாறும் பார்த்த திருவுருவங்களுக்கெல்லாம் வித்தியாசமாக தண்டநாதை வராஹமுகம் கொண்டு விளங்குகிறாள். எதிரிகளின் உயிரைத் தோண்டி அகழ்ந்தெடுப்பவள் என்று அர்த்தம். ஜீவனின் உட்பகைகளையும் தான்! இருக்கரங்களிலே கலப்பையும் உலக்கையும். எதிரே ஒரே இழுப்பாய் இழுத்து மண் சேர அழுத்தவே கலப்பை. அஸுர்களைப் பிளந்து தள்ள உலக்கை. ஜீவன் விஷயத்தில் இவ்வாயுதங்களே அன்பைப் பரிமாறும் அழகுக் காரண்டிகளாகின்றன — ஜீவ மனத்தை நன்கு உழுது பண்படுத்தக் கலப்பை; பண்பட்ட ஜீவனிடம் விளையும் இயக்கங்களிலும் இருக்கக் கூடிய முன் வினை உமியை நீக்க உலக்கை.

தானைத் தலைவியான இவளுக்கும் அரசி லலிதையோடு ஈடாக நிற்கும் பெருமை உண்டு என்பது அவளது சிம்மவாஹனத்தையே இவளும் ஊர்தியாகக் கொள்வதிலிருந்து தெரியும். மஹிஷ வாகனம், மான் வாஹனம் முதலியனவும் கொண்டு மகிமை காட்டுபவள்.

ஜம்புகேச்வரத்தில் அப்புலிங்கனை மணக்க இவள் அவதாரம் செய்கையில் ஸர்வலோக ராணி எனப்பொருள்பட 'அகிலாண்டேச்வரி' என்று பெயர் பெற்றிருக்கிறாளே! இதை ஆக்ஷேபித்து 'அப்பீல்' செய்ய இடமே வைக்காமல் சங்கர பகவத்பாதரும் இந்த அகிலாண்டேச்வரிக்கு வாஹியந்த்ரமின்றி ஸ்ரீசக்ர உருவாகவே அமைந்த தாடகங்களை அணிவித்திருக்கிறார். வராஹ முகமோ, கலப்பை உலக்கைகளோ இன்றிக் கருணைமூர்த்தமாய் அவளும் ஸர்வ லோகத்துக்குமாக அரசோச்சி வருகிறாள்.

தண்டநாதை போருக்குப் புறப்பட்ட போது, தேவர்களே அவளது உத்தண்ட கோலம் கண்டு பயந்தோடி, தொலைவிலிருந்தே அவளது பன்னிரண்டு நாமங்களைக் கூறிப் பணிந்தனர் என்று ஹயக்ரீவர் கூறி நாமும் அறிய அந்த நாமங்களைக் கூறுகிறார்: பஞ்சமி, தண்டநாதா, ஸங்கேதா, ஸமயேச்வரி, ஸமய ஸங்கேதா, வாராஹி, போத்ரிணி (இதற்கும் வராஹமுகி என்றே பொருள்), சிவா, வார்த்தாலி, மஹாஸேனா, ஆக்ஞா சக்ரேஸ்வரி, அரிக்னி (சத்ருக்களை வெல்பவள்).



இப்பொழுதெல்லாம் கல் உப்புக்குப் பதிலாக சமையலில் 'டேபிள் ஸால்ட்'த் தான் பயன்படுத்துகிறோம். காரணம் அது சுத்தமாகவும் வெண்மையாகவும் பளிச்சிடுகிறது. கல் உப்பு சுத்தமாக்கப் படும் பொழுது இரும்புச் சத்து, தாமிரச் சத்து, மாங்கனீஷியச் சத்து, அயோடின் போன்றவைகளை இழந்துவிடுகிறது. ஆகவே சமையலில் கல்உப்பைத்தான் உபயோகிக்க வேண்டும். டேபிள் ஸால்ட்டில் மிஞ்சுவது ஸோடியம் குளோரைட் மட்டும்தான்.

—திருமதி தேவனாதன்

லலிதாதேவி பாசத்தை ஒரு சொடுக்குச் சொடுக்க மிடுக்காய் அதிலிருந்து ஆவிர்பவித்தாள் அச்வாரூடை — புரவியில் ஆரோஹணித்த இவளே ஸ்ரீமாதாவுடைய குதிரைப் படைக்குத் தலைவி. அங்குசத்தை அம்பிகை ஓர் உதறு உதற அதிலிருந்து உதித்தாள் யானைப் படைத் தலைவியான ஸம்பத்கரி. கயிற்றால் கடிவாளமிட்டு ஓட்டப்படும் குதிரைக்குப் பாசத்துடனும், அங்குசத்தால் அடக்கப்படும் யானைக்கு அம்பாளின் அந்த ஆயுதத்துடனும் தொடர்பு உண்டுதானே?

இதன்பின் எண்ணிறந்த ஸேனாவீரர்களையும் தேவி தோற்றுவித்தாள். வீரர்கள் அல்ல, வீராங்கனைகள். பெண் போலீஸை இப்போது சொல்கிறோம். அன்றே அம்பிகை முற்றும் பெண் மயமான படையாகப் படைத்து விட்டாள்! சக்தி ஸேனை என்றே அதற்குப் பெயர்.

(தொடரும்)

# திருமண மலர்

பிரஹசரணம், பாரத்வாஜ கோத்திரம், வயது 32, பி. ஏ., எலக்ட்ரானிக் என்ஜினியர், மூல நட்சத்திரம், ரூ. 2000 — சம்பாதிக்கும் பையனுக்கு ஐயர் வகுப்பைச் சேர்ந்த உயரம் 5 '2''க்கு மேல் வேலைக்குப் போகாத நல்ல நிறமுள்ள அழகான பெண் தேவை. பெட்டி எண்: 1290.

வாதூல கோத்திரம், தென்கலை ரோஹிணி நட்சத்திரம் 29 வயது 5' 1'' உயரம். பி.எஸ்ஸி. பி.எட், ரயில்வேயில் உத்தியோகம். வீணையில் தேர்ச்சி உள்ள பெண்ணிற்குத் தகுந்த வரன் தேவை. வடகலை வித்தியாசம் இல்லை. பெட்டி எண்: 1291.

Alliance invited from Non-Srivatsa graduate fair Iyer girls. Keralite only. 25-27. for graduate boy officer Public Sector - star Moolam- Suddha Jathakam. reply with horoscope - biodata. Box No: 1292.

Wanted Non-Kaundinya Vadakalai / Thenkalai Iyengar graduate boys below 32 preferably working in North, for a fair graduate girl 24/153 pooratathi domestically trained. Send horoscope to Box No: 1293.

Wanted Non-Koundinya good looking preferably Brahacharanam age 24/27 Bank Government employed graduate Iyer girl for a handsome Nationalised Bank officer age 31 star Pooradam. reply with horoscope. Box No: 1294.

வயது 36, பிரஹசரணம், கௌசிக கோத்திரம், கார்த்திகை நட்சத்திரம், எம்.ஏ. பி.எட் படித்த அரசு பள்ளியில் வேலை பார்க்கும் பிராம்மணப் பெண்ணுக்குத் தகுந்த வேலை பார்க்கும், பட்டதாரி வரன் தேவை. பையன் 42 வயதிற்குள் இருத்தல் வேண்டும். உட்பிரிவுகள் சம்மதம். ,ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1295.

தேசிய பாங்கில் வேலை செய்யும் (Rs. 900) தெலுங்கு பிராமணாள் மூலகநாடு பிரிவு-பட்டதாரி. தெய்வபக்தி முதலிய நற்பண்புகள் நிறைந்த, குடும்ப பாங்கான, லக்ஷணமான (27 வயது-165 cum). பெண்ணிற்கு-ஏற்ற மணமகன் தேவை எந்த உட்பிரிவும் சம்மதம்-சுத்த ஜாதகம்-ஆடம்பரம் அற்ற நடத்தர திருமணம். பெண்ணுக்கு சகோதரர்கள் இல்லை. ஜாதகம் மற்றும் விவரங்களுடன் விண்ணப்பிக்கவும் பெட்டி எண். 1296

Alliance Solicited from well placed groom. any subsect for Sankiruthi Brahacharanam graduate girl, 34, Avittam, 5' 2'', fair, Bank employed Madras, earning Rs. 1500/- p.m from respectable family. reply with horoscope and family details Box No: 1297.

Alliance for Kousika - Sravanam (5' 10') 29, Brahacharanam well qualified Company executive at Hosur 1800/- from graduate, tall, beautiful Bank employed girl transferable to Hosur (Vadama acceptable) Horoscopes to Box No: 1298.

பாரத்வாஜ கோத்திரம், வடகலை ஐயங்கார், உத்திரட்டாதி நட்சத்திரம், 23 வயது நிரம்பிய எம்.ஏ. படித்த பாங்கில் வேலை செய்யும் பெண்ணிற்கு நன்கு படித்த நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. ஜாதகத்துடனும், போட்டோவுடனும் எழுதவும். அதே இனத்தில் உள்ள மணமகன் தேவை. பெட்டி எண்: 1299.

ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடகலை ஐயங்கார் வயது29, உயரம் 5' 6'' அரசாங்க வேலை (நல்ல உத்தியோகம்) சம்பளம் 1200, கேட்டை நட்சத்திரம். பெண்ணுக்கு நல்ல வேலையில் உள்ள உயரமான வரன் தேவை. விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 1300

Alliance invited from enlightened parents of Tamil Iyer groom decent family for Astasahasram Barani girl S.S.L.C. 30. daughter of parents of good family. Though slight mental illness attending normal work. Early decent marriage assured subsect acceptable. Kindly respond with horoscope and full details to Box No: 1301.

இந்து வயது 36 உயரம் 148 செ.மீ. மெட்ரிகுலேஷன் சொந்த வியாபாரம் மாதம் 4000 த்திற்கும் மேல் ஈட்டும் கோயமுத்தூரில் வசிக்கும் வரனுக்கும், கூட அவரது சகோதரர் வயது 34 உயரம் 160 செ. மீ. மெட்ரிகுலேஷன், வியாபாரம். மாதம் ரூ. 4000த்திற்கும் மேல் இந்த இரு வரன்களுக்கும் குடும்பப் பாங்கான அழகுள்ள வேலையில் இல்லாத மணமகள்கள் தேவை. ஜாதி பேதமில்லை. பெட்டி எண்: 1302.

இந்து வயது 29 உயரம் 160 செ. மீ. சொந்த வியாபாரம், எம். காம்., மாதம் ரூ. 3500 க்கு மேல் ஈட்டும் கோயமுத்தூர் வரனுக்கு குடும்பப்பாங்கான அழகுள்ள, படித்த, மணமகளும்கூட அவரது சகோதரி வயது 27 (பி. காம்.) உயரம் 147 செ. மீ. குடும்பப்பாங்கும் அழகும் உள்ளவருக்கு வசதியான பட்டதாரி வரன் தேவை. பெண் கொடுத்து வாங்க

திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/- தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தரவேண்டும். பதில் அனுப்புபவர்கள் ''விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o. மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600 032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்குவரத்து கிடையாது.

மட்டுமே சம்மதம். சாதி பேதமில்லை பெட்டி எண்: 1303.

சைவ செட்டியார் வகுப்பைச் சேர்ந்த 27 வயது நட்சத்திரம் பூராடம் மாத வருமானம் ரூ.500. விவாகரத்து ஆகிவிட்டது. 35 வயது முதல் 45 வயது வரை ஆனவர் எந்த மதமானாலும் சம்மதம். மணமகன் விவாகரத்து ஆனவர் ஆனாலும் தாரமிழந்தவர் ஆனாலும் பரவாயில்லை. ஆனால் கடைசி வரை வைத்துக் காக்கின்றவராக இருக்க வேண்டும். பெட்டி எண்: 1304.

தென்னாற்காடு மாவட்டம், அரசுத் துறையில் (மருத்துவத் துறை) சுகாதாரப் பார்வையாளராக பணிபுரியும் முப்பது வயதுடைய (30) சைவ வெள்ளாளப் பெண்ணிற்கு, அதே சமூகத்தில் அரசாங்க உத்தியோகத்தில் உள்ள வரன்தேவை. சைவமாக இருக்க வேண்டும். பெண்ணிற்கு மாத சம்பளம் ரூ. 900. பெட்டி எண்: 1305.

வன்னிய க்ஷத்திரிய படையாச்சி எம். ஏ.படித்து சொந்தத்தில் டுடோரியல் காலேஜ் நடத்தும் 30 வயது உள்ள மணமகனுக்கு படித்த அழகுள்ள குடும்பப்பாங்கான பெண் தேவை. போட்டோ ஜாதகத்துடன் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1306.

பிரஹசரணம், கூடமர்ஷண கோத்திரம், ஐயர், வயது 29, 21, பட்டதாரி சகோதரிகளுக்கு நல்ல வரன்கள் தேவை. ஆசாரமான குடும்பம், குடும்பப் பெண்கள் எல்லோரும் இரு மூக்குத்தி அணிந்து மடிசார் அணியும் பழக்கத்தை விடாமல் கடைப்பிடித்து வருகின்றனர். அதே பழக்கவழக்கங்களுடைய குடும்பங்களிடமிருந்து வரன்களின் ஜாதகங்கள் கோரப்படுகின்றன. பெட்டி எண்: 1307.

தனியார் பள்ளியில் ரூ. 1000 சம்பளம் பெறும் முதுகலை பட்டதாரி (எம். காம். பி. எட்.,) ஆசிரியராக பணிபுரியும் 30 வயது பூர்த்தி அடைந்த இளைஞருக்கு, குலாலா அல்லது குயவர் வகுப்பைச் சார்ந்த ஆசிரியை அல்லது வேறு துறையில் வேலை பார்க்கின்ற பெண் தேவை. பெட்டி எண்: 1308.

"அரசு வங்கியில் பணிபுரியும் சைவ வேளாள வகுப்பை சேர்ந்த மணமகனுக்கு, வயது 27, B.Sc., B.Ed., CAIIB-I, அதே வகுப்பை சேர்ந்த, அரசு வங்கியோ, பாரத ஸ்டேட் பாங்கியோ, பணிபுரியும் மணமகள் தேவை." பெட்டி 1309

Wanted bride Medico/Engg./MBA/P.G. for Iyer Bharadwaja handsome Engineer boy 27 years Green Card holder 5' 9" Belonging to well known reputed family arriving shortly from States. Box No: 1310.

Alliance invited for Bharadwaja Brahacharanam Sadhayam aged 31 years girl employed in Central Government, Salary Rs. 1000/- Domestically trained. Sub-sect no bar. simple and early marriage. Box No: 1311.

திருமணமாகி ஒரே மாதத்தில் கணவனின் கொடுமையால் பிரிக்கப்பட்டு பின் விவாகரத்து பெற்ற நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, நற்குணங்கள் கொண்ட, நன்கு வீட்டு வேலைகள் தெரிந்த 28 வயது பிராமணப் பெண்ணுக்கு 35 வயதுக்குள்ளிருக்கும், பரந்த மனப்போக்குடைய, நற்குணங்கள் கொண்ட நல்ல வேலையிலிருக்கும், பிராமண மணமகன் தேவை. பெண் மத்திய அரசாங்கத்தில் வேலை பார்க்கிறாள். மனைவியை இழந்து குழந்தை இல்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1312.

பெண் பிரஹசரணம், காசியப கோத்திரம் விசாக நட்சத்திரம், 30 வயது படிப்பு எம். ஏ., மாநில அரசில் உதவியாளராக வேலை. நல்ல பதவியில் உள்ள 36 வயதுக்குட்பட்ட மணமகன் தேவை. வடமாள், அஷ்ட சஹஸ்ரம், வாத்திமா ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1313.

பெண் பிரஹசரணம், காசியப கோத்திரம், சித்திரை நட்சத்திரம், பி. ஏ. படித்த 39 வயதுடைய மத்திய அரசில் (ரயில்வே) வேலைபார்க்கும் பெண்ணுக்குத் தகுந்த வேலையில் உள்ள மணமகன் தேவை. 43 வயதுக்குட்பட்டவர்கள் விண்ணப்பிக்கவும். வடமாள், அஷ்டசகஸ்ரம் வாத்திமா ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1314.

பெண் பிரஹசரணம், காசியப கோத்திரம், சதய நட்சத்திரம், படிப்பு எஸ்.எஸ்.எல்.சி., மாநில அரசைச் சார்ந்த நிறுவனத்தில் உதவியாளர் வேலை. தகுந்த பதவியில் உள்ளவர்கள் விண்ணப்பிக்கவும். 40 வயதுக்குட்பட்டவர்கள் விண்ணப்பிக்கவும். வடமாள், அஷ்ட சஹஸ்ரம், வாத்திமா ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1315.

தமிழ் ஐயர், ஆத்ரேய கோத்திரம், உத்திர நட்சத்திரம், 26 வயது, பி. யு. ஸி. வரை படித்துள்ள குடும்பப்பாங்கான பெண்ணுக்கு மணமகன் தேவை. பெண்ணுக்கு உடம்பில் வெள்ளைத் தழும்புகள் (Lucoderma) உள்ளன. இதேபோல் வெள்ளைத் தழும்புடையவர்களோ, சிறு ஊனம் உள்ளவர்களோ இருந்தாலும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1316.

கௌசிக கோத்திரம், மகம் 26 வயது தற்சமயம் திருவனந்தபுரத்தில் தனியார் கம்பெனியில் உத்தியோகம் பார்க்கும் எஸ். எஸ். எல். ஸி.படித்த குடும்பப் பாங்கான பெண்ணுக்கு சர்க்கார்/ தனியார் அலுவலகத்தில் நிரந்தர வேலையில் இருக்கும் கௌசிக கோத்திரம் அல்லாத 30, 33 வயது மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1317.

இந்து நாடார், நடுத்தரக் குடும்பம், 30 வயது, 5' 2" உயரம், படிப்பு பி. எஸ்ஸி, மாநில அரசில் நிரந்தர பணியும் உள்ள பெண்ணுக்கு நிரந்தர பணியிலுள்ள மணமகன் தேவை. பெட்டி எண்: 1318

கௌசிக கோத்திரம், பரணி, பிரஹசரணம், பி. எஸ்ஸி., ஏ.ஸி.எஸ்., 29/154; மத்திய அரசு வேலையிலிருக்கும் பெண்ணிற்குப் பொருந்தும் மணமகன் தேவை. உட்பிரிவுகள் ஏற்றுக் கொள்ளப்படும். பெட்டி எண்: 1319.

Bharadwaja Iyer 27/155 intelligent talented. Service-minded unemployed girl seeks educated well-employed groom Broad out-look essential girl.has small-pox marks in the face. Those who are interested correspond to Box No: 1320.

தமிழ்ப் பட்ட மேல் படிப்புத் தேர்வுடன், ஸயன்ஸ் பட்டமும், ஆசிரியை டிப்ளமோ மற்றும் அனுபவமும் பெற்றுள்ள, அழகும் குணமும் பொருந்திய குடும்பப் பாங்கான 33 வயது காசியப கோத்திர அய்யர் பெண்ணிற்குத் தகுந்த வரன் (பிரஹசரணம் வடமாள்–

அஸ்டசஹஸ்ரம்.) தேவை. விபரங்களுடன் ஜாதகம் அனுப்பவும். பெட்டி எண்: 1321.

26 வயது, நல்ல அழகுள்ள, குடும்பப்பாங்கான், படித்துள்ள பெண்ணுக்கு அரசாங்க – பாங்க்–கம் பெனி நிரந்தர வருமானமுள்ள வரன் தேவை. சுவாதி நட்சத்திரம். பெண்ணின் சகோதரனுக்கு 30 வயது வட இந்தியாவில் மத்திய அரசு நிறுவனத்தில் மாதம் ரூ. 1000– வருமானம் ரோகிணி நட்சத்திரம். படித்துள்ள அழகான குடும்பப்பாங்கான மணமகள் தேவை. கவுண்டர் வகுப்பு. பெண் கொடுத்துப் பெண் எடுக்கவும் சம்மதம். விவரங்களுக்கு பெட்டி எண்: 1322.

வடமாள், ஆத்ரேய கோத்திரம் (2.2.1948 ல்) சுவாதி, மின்சார வாரியத்தில் ரூ. 1200– வாங்கும் பையனுக்கு பெண்ணும் 7.8.1953–ல் புனர்பூசம் (7–ல் செவ்வாய்) பி. ஏ., தனியார் துறையில் ரூ. 600– வாங்கும் பெண்ணுக்குப்பையனும் ஒரே குடும்பத்தில் கொடுத்து வாங்க விரும்பம் இருப்பவர்கள் மட்டும் ஜாதகத்துடனும் முழு விபரத்துடனும் விண்ணப்பிக்கவும். பிராமணரும் விண்ணப்பிக்கலாம் பெட்டி எண்: 1323.

மாநிறம். 27 வயது, எஸ்.எஸ்.எல். ஸி. தேறிய பண்புள்ள குடும்பப்பாங்கான தமிழ் யாதவ மணமகனுக்கு இதே இனத்தில் உத்தியோகத்திலோ அல்லது தகுந்த வருவாய் உள்ள 32 வயதுக்கு மேற்படாத தகுதியான மணமகள் தேவை. பெட்டி எண்: 1324.

கௌதம பிரதூசரணம் 33 வயது மூலம் 3 ம் பாதம் எஸ். எஸ். எல். ஸி. மாநிறம் 5'' உயரம் குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நிரந்தர வேலையிலுள்ள வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். மனப்பொருத்தமும் சம்மதம். பெட்டி எண்: 1325.

திறமையும், ஒழுக்கமும் பொருந்திய அரசு போக்குவரத்து கழகத்தில் வேலையில் உள்ள 31 வயதுடைய பி. யூ. ஸி. வரை படித்துள்ள நாட்டுக்கோட்டை செட்டியார் (கிராஸ்) மணமகனுக்கு பொறுப்பும், நற்பண்பும் மிக்க மணமகள் தேவை. தகுதியுள்ள ஏனைய பிரிவினர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 1326.

Wanted bridegroom for Mudaliar bride-graduate, Central Service in Madras 30years 165 c.ms. Box No: 1327.

பாரத்வாஜ கோத்திரம் வடமாள் 33 வயது 155 செ. மீ. உயரம் அரசுடைமை வங்கியில் அதிகாரியாக பணிபுரியும் வரனுக்கு அதே உட்பிரிவைச் சேர்ந்த பட்டதாரிப் பெண் தேவை. பெட்டி எண்: 1328.

Alliance invited from Non-Haritha Gothra Brahmin boys employed for domestically trained, employed girl age 31. star Karthigai. fair complexion. Boy's Chevai in the seventh place preferred. Box No: 1329.

ஆத்ரேய கோத்திரம். திருவாதிரை தென்கலை ஐயங்கார். மணமகளுக்கு; பிராமண உட்பிரிவுகள் எதுவாயினும் சம்மதம். ஜாதகம் கட்டாயமில்லை. பெண் சுமாரான அழகு. எஸ்.எஸ்.எல். ஸி. தையல் தெரிந்த குடும்பப்பாங்கானவள். வயது 8.12.57. நிரந்தர வருமானம் உள்ள, அரசாங்க அல்லது தனியார் துறையில் உள்ளவர்கள் விண்ணப்பிக்கலாம். ஒரு சகோதரி கலப்புத் திருமணம். தகுந்த முறையில் திருமணம் செய்து தரப்படும். பெட்டி: 1330.

துளுவ வேளாளர் வகுப்பைச் சேர்ந்த 28 வயதுள்ள, சொந்தமாக தொழில் புரியும் வசதியுள்ள பட்டதாரி மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல குடும்பப் பாங்கான மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பி. யு. ஸி. படித்துள்ள 31 வயதுள்ள மணமகளுக்கு தகுந்த வரன் தேவை ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1331.

Wanted Tamil Smartha bride under 25. employed in a nationalised bank or L. I. C. for Sreevatsa Vadama graduate of Palghat, 29 years, 5' 9'', Kettai, employed in Indian Bank. Box No: 1332.

சோழிய வேளாளர் வகுப்பைச் சேர்ந்த மணமகள்கள், மணமகன்கள் தேவை. ஜாதகம், இல்லாவிடில் பிறந்த தேதி, நேரம், ஊர், பெயர், வயது ஆகியவற்றுடன் படிப்பு, பெற்றோர், உறவினர்கள் விவரம் உடனே எழுதவும். பெட்டி எண்: 1333.

இந்து கள்ளர் வகுப்பு, 25 வயது, எஸ்.எஸ். எல். ஸி. டிப்ளமா இன் ஸி.டி.டி.எம். (கர்நாடகா) படித்த, சிவப்பு நிறமும், அழகும் குணமும்குடும்பப் பாங்குமுள்ள சுமார் 5 அடி உயரமுள்ள பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த படித்த, நற்குணம் வாய்ந்த, போதிய வருமானமுள்ள நிரந்தர வேலையிலிருக்கும் 32 வயதுக்கு மேற்படாத மணமகனும் 29 வயது. பி. காம்., படித்த சிவப்பு நிறமும் நற்குணமும் 5 அடி உயரமும் தனியார் துறையில் ரூ. 800 – வருமானமும் உள்ள பெண்ணின் அண்ணனுக்கு சிவப்பு நிறமும் அழகும் குணமும் குடும்பப் பாங்கும் உள்ள படித்த பெண் தேவை. பெட்டி எண்: 1334.

Wanted Saiva Vellala (Subsections no objection) bride goodlooking aged below 25 from a respectable family for a Saiva-Vellala boy Avittam star, P.U.C. doing business (net income Rs. 1000/- per month) fair healthy no smoking nor any bad habits. Owns a good house. Rental share Rs. 1000/- per month. Box No: 1335.

28 வயது நிரம்பிய (உயரம் 155 செ. மீ.) இந்து பள்ளர் வகுப்பைச் சேர்ந்த ஆரோக்கியமான, வங்கியில் பணிபுரியும் பையனுக்கு சுமாரான அழகுள்ள, வசதியான அல்லது உத்தியோகத்தில் உள்ள பெண் தேவை. ஜாதி, மத, விதவை போன்ற தடை எதுமில்லை. பெட்டி எண்: 1336.

Non-Koundinya Vadakalai Bank officers Engineers, C.A.s Officer designates for fair Graduate Girl 29, Sathayam, Nationalised Bank details to Box No. 1337.

ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடமாள், திருவாதிரை எஸ். எஸ். எல். ஸி. நன்றாக சமையல், தையல், வீட்டு நிர்வாகம் தெரிந்த 26 வயதுடைய காது கேளாத ஊமைப் பெண்ணுக்கு நல்ல குணம் கருணை உள்ளம் கொண்ட படித்த நிரந்தர வருமானம் கொண்ட மணமகன் தேவை. கோவிலில் வைத்து திருமணம் நடத்தித் தரப்படும். வரதட்சிணை கொடுக்க வசதியில்லை. இதே மாதிரி குறையுள்ள வேலை பார்க்கும் ஊமைப்பையனுக்கும் அல்லது இரண்டாந்தாரமாக இருந்தாலும் பரவாயில்லை. கடைசி வரைக்கும்வைத்துக் காப்பாற்ற வேண்டும். போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1338.

வடமான், ஸ்ரீவத்ஸ கோத்திரம், உத்திரம், எஸ். எஸ். எல். சி., 31 வயது, 5' 2", வீட்டு வேலைகள் தெரிந்த லட்சணமான, இளமைத் தோற்றமுள்ள சென்னையில் தனியார் துறையில் ரூ. 400— சம்பளம் பெறும் பெண்ணிற்குப் பையன் தேவை. உட்பிரிவு சம்மதம் பெட்டி எண்: 1339.

ஏழ்மையான குடும்பத்தைச் சேர்ந்த 33 வயது பெண்ணிற்கு மணமகன் தேவை. ஐயர் பிரஹசரணம் கார்க்க கோத்திரம், சதய நட்சத்திரம். எஸ். எஸ். எல். சி., டைப்ரைட்டிங் (ஆங்கிலம்) தமிழ் ஹையரும், டி.டி.சி. கோர்ஸும் பாஸ் செய்துள்ளாள். உட்பிரிவுகள் பரவாயில்லை. ரொம்பவும் சுமாராகத்தான் திருமணம் செய்து கொடுக்க முடியும். உயரம் 5' 3" நல்ல நிறம். பெட்டி எண்: 1340.

வடமான்; கௌசிக கோத்திரம்; சதயம்; தமிழக அரசு வேலையில் இருக்கும் பி. எஸ்ஸி. படித்த, 32 வயதான, 5' 3" உயரமுள்ள பெண்ணிற்கு, நல்ல உத்தியோகத்தில் இருக்கும் 40 வயதிற்குட்பட்ட வரன் தேவை. ஜாதகத்துடனும், மற்ற விபரங்களுடனும் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1341.

நைத்ருவ காசியப கோத்திரம், மூலம் நட்சத்திரம், 25 வயது எஸ். எஸ். எல். சி., டைப்ரைட்டிங், ஷார்ட்ஹாண்ட் படித்த குடும்பப்பாங்கான 5' 3" அழகான வடகலை அய்யங்கார் பெண்ணிற்கு மத்திய—மாநில—நல்ல கம்பெனியில் நிரந்தர வருவாயுள்ள அதே பிரிவில் மணமகன் தேவை. பிராமண பிரிவு எதுவாயிருப்பினும் சம்மதம். நல்ல முறையில் திருமணம் செய்விக்கப்படும். பெட்டி எண்: 1342.

பாரத்வாஜ கோத்திரம், பிரஹசரணம், பூசம் நட்சத்திரம் 4' 11" உயரம் வங்கியில் பணிபுரியும் 23 வயது பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள, குணமுள்ள, பரந்த மனப்பான்மையுடைய அதே வகுப்பைச் சேர்ந்த வரன் தேவை. ஜாதகம் போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1343.

குடும்பப்பாங்கும், அடக்கமும், தெய்வபக்தியும், மாநிறம், பட்டதாரி, வயது 32, சென்னையில் மாநில அரசுப் பணி, சம்பளம் ரூ. 925— பட்டு நூல் செட்டி இனம், நடுத்தர குடும்பம், திருமணமாகாத பெண்ணுக்கு கலப்புத் திருமணத்தில் நம்பிக்கை உள்ள மாநில — மத்திய அரசுப்பணியில் எழுத்தர் பதவி வகிக்கும் திருமணமாகாத பையன்களின் பெற்றோர்களிடமிருந்து சம்பந்தம் கோரப்படுகிறது. இந்துமத எந்த சாதியும் சம்மதம். லட்சத்திற்கு மேல் ரொக்க சொத்து பெண்ணுக்கு உண்டு. பெட்டி எண்: 1344.

மத்வ கன்னடம், கௌதம கோத்திரம், 26 வயது, அவிட்ட நட்சத்திரம், படிப்பு பி.யூ.சி. ஏ. யூ. சி. யில் மாதம் ரூ. 300 சம்பளம் பெறும் அழகிய பெண்ணிற்கு நல்ல வேலையில் உள்ள ஐயர் மணமகன் தேவை. போட்டோ ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவு எதுவும் சம்மதம். பெட்டி எண்: 1345.

Horoscopes invited from Non-Uthithya Gothra below Thirty. Highly placed either C. A., or B. E. Bridegrooms drawing minimum 1200 p.m. for a fair looking, domestically trained only daughter 23 doing her final B. A. of an Executive in International Company. Star Kettai - girl having Angaraha Dosham in 7th house-Vadamal. reply to Box No: 1346.

குடும்பப் பாங்கும், தெய்வபக்தியும், பெண்ணிற்கு உரித்தான இனிய இயல்பும் பதினொன்றாவது வரை படித்த 23 வயது எழிலும், ஆரோக்கியமும், சாமர்த்தியம் நிறைந்த பட்டு நூல் செட்டி, மத்தியதர குடும்ப பெண்ணுக்கு மத்திய — மாநில அரசுப்பணியில் கிளார்க் பதவிக்கு குறையாத திருமணமாகாத வரன் தேவை. பெண்ணுக்கு ஒன்றரை லட்ச ரூபாய் வரை ரொக்கம் உண்டு. இந்துமத எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண்: 1347.

சைவ பிள்ளை, 26 வயது, 165 செ. மீ. உயரமும், நற்குணங்கள் நிரம்பிய பெண்ணிற்கு அதே இனத்தை சார்ந்த மணமகன் தேவை. மணமகன் வேலையில் இருத்தல் நலம். என்ஜினியர்கள் வரவேற்கப்படுகிறார்கள். விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 1348.

Alliance from Tamil Iyer Groom well qualified well placed respectable family for a good looking medium complexion active habits Ashtasahasram Aswathi girl, 28, B. A., smart and domestically wellversed, family of moderate means. Sub-sect acceptable. early decent marriage. Reply with full details to Box No: 1349.

தமிழ் முஸ்லிம், வயது 40, சொந்த தொழில் வருமானம் மாதம் ரூ 1500 வரை, தென் மாவட்டங்களைச் சேர்ந்த மணமகள் தேவை. விவாகரத்தாயிருந்தாலும் உத்தியோகத்திலிருந்தாலும் பரவாயில்லை, எம்மதமும் சம்மதம். பெட்டி எண்: 1350.

சென்னையில் கிளார்க் வேலை, மாதம் ரூ. 650— இந்து சைவ செட்டி இனம், லட்சணம், ஒழுக்கம், இனிய சுபாவம் உள்ள 29 வயது பையனுக்கு சென்னையில் வேலை அல்லது வெளியூரில் அரசு வேலை பார்த்தால் சென்னைக்கு மாறுதல் ஆகி வரும் வாய்ப்புள்ள குணமுள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணின் பெற்றோர்கள் தொடர்பு கொள்ளவும். பையனுக்கு சொத்து உண்டு. இந்து மத எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண்: 1351.

Alliance invited from well settled Iyer or Iyengar Boys of Age about 37, for an extremely young looking and talented graduate Iyer girl belongs to affluent family. correspond with details of Boy and family to Box No: 1352.

அரசாங்க நிறுவனத்தில் வேலை பார்க்கும் இந்து ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த பட்டதாரி மணமகனுக்கு வயது 31, சம்பளம் 900— அரசாங்கத்தில் பணிபுரியும் பெண் தேவை. படித்து வேலையில்லாமலிருக்கும் குடும்பப்பாங்கான பெண்ணும் விண்ணப்பிக்கலாம். சாதிமத வேறுபாடில்லை. ஜாதகம் தேவையில்லை. போட்டோ விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 1353.

மாடல கோத்திரம் — அசுவினி — 28 வயது தமிழ் ஐயர் மத்திய அரசு வேலை — ரூ. 1100— — பையனுக்கும், கேட்டை 25 வயது — ரூ. 450 பெண்ணுக்கும் சென்னையில் வேலை பார்க்கும் வரன்கள் தேவை. பெண் கொடுத்து வாங்க விருப்பமுள்ளவர்களும் தொடர்பு கொள்ளலாம். பெட்டி எண்: 1354.







✲ மகளிர் அதிகமாகப் பணிபுரியும் நிறுவனங்களுள் சென்னைத் தொலைபேசி முக்கியமானது.

✲ மூன்றுண்டுகட்கு முன்பு ஒருபெண் இந்த நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பை (பொது மேலாளர்) ஏற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

✲ இதுதவிர எழுத்தர்களாகவும், டெ லா றி யி ய ல் வல்லுநர்களாகவும் பெண்கள் பணிபுரிகின்றனர். குறிப்பாகச் சென்னைத் தொலைபேசியில் பணிபுரியும் 1544 ஆபரேட்டர்களில் 1401 பேர் பெண்கள்.

✲ பெண்கள் அதிகமாகப் பணிபுரியும் ட்ரங்க் எக்ஸ்சேஞ்ச், ஸ்பெஷல் சர்வீஸ் எக்ஸ்சேஞ்ச், மற்றும் இண்டர்நேஷனல் டிரங்க் எக்ஸ்சேஞ்ச் போன்ற இடங்களில் அவர்களுக்கென்று சிலவசதிகள் செய்து கொடுக்கப்பட்டுள்ளன.

## குழந்தைகள் காப்பகம்:

'டிரங்க் எக்ஸ்சேஞ்ச்' வளாகத்தில் ஆறு மாதங்கள் முதல் பதினெட்டு மாதங்கள் வரை உள்ள குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதற்காக ஒன்றும், பதினெட்டு மாதங்கள்முதல் மூன்று வயது வரை உள்ள குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்காகவும் இரண்டு காப்பகங்கள் உள்ளன. தேர்ச்சி பெற்ற ஆயாக்கள் குழந்தைகளைக் கவனித்துக் கொள்கிறார்கள். இதைத் தவிர ஸ்பெஷல் சர்வீஸ் எக்ஸ்சேஞ்சிலும் ஒரு குழந்தைகள் காப்பகம் இருக்கிறது.

## ஆபீஸில் ரெஸ்ட் ரூம்!

✲ இரண்டு பெரிய ஓய்வறைகள் படுக்கை வசதியுடன் உள்ளன. அவற்றில் ஒன்று ஏ. சி. செய்யப்பட்டது.

✲ சென்னைத் தொலைபேசியில் உள்ள மொத்த ஊழியர்களில் 26% பெண்கள்

✲ இண்டர்நேஷனல் ட்ரங்க் எக்ஸ்சேஞ்ச் தொலைக்காட்சி நிறுவனத்தின் அருகே உள்ள ஒரு கட்டிடத்தில் உள்ளது. இரவு ஏழு மணிக்கு மேல் அங்கே பெண்கள் நடமாட முடியாது என்று அச்சம் உள்ளதால் ஏழுமணிக்கு மேல் பணிக்கு வருபவர்களை அழைத்து வரவும், பணிமுடிந்தவர்களை அழைத்து செல்லவும் பார்க் ரயில் நிலையத்திலிருந்தும், அண்ணாசாலை பஸ் ஸ்டாப்பிலிருந்தும் வேன் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

✲ இதுதவிர எல்லா ஊழியர்களுக்கும் பொதுவாக ஊழியர் நல உதவித் தொகையிலிருந்து பல வகையான உதவிகள் அளிக்கப்படுகின்றன.

✲ சமூகப் பாதுகாப்புத் திட்டம் என்று ஒரு திட்டம் நடைமுறையில் உள்ளது. இந்தத் திட்டத்தின்படி இந்தத் திட்டத்தில் இருக்கும் ஊழியர் யாராவது இறக்க நேர்ந்தால் அந்த ஊழியர் குடும்பத்திற்கு இந்தத் திட்டத்தில் உறுப்பினர்களாக இருக்கும் அனைவரும் ஆளுக்கு ஒரு ரூபாய் உதவியாகக் கொடுக்கிறார்கள். இதில் கிட்டத்தட்ட 4000 பேர் உறுப்பினராக இருப்பதால் கணிசமான தொகை கிடைக்கிறது. இது தவிர ஊழியர் நல நிதியிலிருந்தும் உடனடியாக ஆயிரம் ரூபாய் கொடுக்கப்படுகிறது.

✲ விளையாட்டில் ஆர்வம் உள்ளவர்கள் ஊக்குவிக்கப்படுகிறார்கள். பெண் ஊழியர்களில் பலர் விளையாட்டு வீராங்கனைகளாகவும், பல் கலை வல்லுநர்களாகவும் விளங்குகிறார்கள்.

- டி. ஆர். ரமேஷ்

அட்டை வண்ணப்படம்: பால்ராஜ்

# டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி

முத்துலட்சுமி ரெட்டி 1962—ல் மருத்துவத்தில் தேர்ச்சி பெற்றார். ஒரு இந்துப் பெண் மருத்துவத்தில் பட்டம் (M.B.&C.M.) பெற்றது முதல் தடவை. அது மட்டுமல்ல ஐந்து வருடத்தில் தேர்ச்சி பெற்றது மட்டுமின்றி, பல பரிசுகளை வாங்கிக் குவித்திருந்தார்.

இந்தச் செய்தி நாடு எங்கும் பரவிற்று. பல ஆஸ்பத்திரிகள் முத்துலட்சுமிக்குப் போட்டி போட்டுப் பதவி கொடுக்க முன் வந்தன. எழும்பூர் பெண்கள் ஆஸ்பத்திரியில் முத்துலட்சுமி ஹவுஸ் ஸர்ஜனாக சேர்ந்து பயிற்சி பெற்றுக் கொண்டார். அந்த ஆஸ்பத்திரியில் முதல் பெண் ஹவுஸ் ஸர்ஜன் அவரே.

பின்னர் தமது சொந்த ஊரான புதுக்கோட்டையில் உத்தியோகம் பார்க்க எண்ணினார் அவர்.

ஆனால் அங்குள்ள ஆஸ்பத்திரியில் வேலை பார்த்த ஆங்கிலோ இந்தியப் பெண்ணும், பிரதான மருத்துவ அதிகாரியும் அவள்மீது பொறாமை காட்டவே, தமது உத்தியோகத்தை விடுத்துச் சென்னையில் தாமாக ஒரு கிளினிக் வைத்து நடத்தத் தொடங்கினார். வாடிக்கை ஏராளமாக வந்தது. பணமும் குவிய ஆரம்பித்தது.



26 வயது ஆனால் அம்மா சும்மா விடுவாளா? கல்யாணத்துக்கு நச்சரிக்க ஆரம்பித்தாள். தந்தை நாராயணசாமிக்கும் இதில் கவலை இருந்தது. முத்துலட்சுமியை அழைத்து, ''திருமணம் செய்து கொள்வது என்றால் இப்போதே செய்து கொள்ளவேண்டும். இல்லாவிடில் திருமணம் செய்யாமலேயே இருந்து விட வேண்டும்'' என்று கூறினார்.

ஒன்று இரண்டு வரன்கள் வந்தன. எதுவும் அவருக்குப் பிடிக்கவில்லை.

திருமணத்தில் அவ்வளவாக அவருக்கு நாட்டமில்லை. திருமணமாகி பெண்கள் சுதந்திரம் இழந்து அல்லல் படுவதை அவர் நிறையப் பார்த்து விட்டார். இதனால் அந்த நிலைப்பாட்டை கொள்ளாதிருந்தார்.

## ஸ்ரீ வேணுகோபாலன்



படிப்பு முடிந்து உடம்பு ரொம்ப பலவீனமாகி முத்துலட்சுமி புதுக்கோட்டையில் தங்கி இருந்த போது ஒரு நிகழ்ச்சி நடந்தது.

அவரது அம்மா பழைய ஜோஸ்யரைத் திரும்பி வரவழைத்தார். முத்துலட்சுமியின் ஜாதகத்தைக் காண்பித்துப் பலன் கேட்டார். சிறிது நேரத்தில் தாயார் முத்துலட்சுமியை கீழே அழைத்தார். ''ஜோஸ்யர் என்ன சொல்கிறார், கேளு'' என்றார்.

''திருமணம் அடுத்த வருடத்துக்குள் நடக்கும். மணமகன் வடக்கேயிருந்து வருகிறான். முத்துலட்சுமிக்கு மூன்று ஆண் குழந்தைதான் பிறக்கும்''

ஜோஸ்யர் இதைச் சொன்னதும் முத்துலட்சுமிக்குச் சிரிப்பாக வந்தது. திருமணம் என்கிற எண்ணம் அவருக்கு இல்லவே இல்லை.

அப்படியிருந்தும் ஆச்சரியமாய், ஜோஸ்யர் சொன்னபடி எதுவும் பிசகாமல் அப்படியே நடந்தது என்கிறார் முத்துலட்சுமி.

விசாகப்பட்டணத்தில் டாக்டர் சுந்தர ரெட்டி புகழோடு இருந்தார். (எப். ஆர். சி. எஸ்)

இங்கிலாந்து சென்று படித்தவர், முத்துலட்சுமியின் புலமை பற்றி அவர் பலர் வாயிலாகக் கேட்க நேர்ந்தது. எப்படியும் அவரையே மணப்பது என்று முடிவு செய்தார்.

நாராயணசாமியை அணுகியதும் அன்றி, தாயார் சந்திரம்மாளை நேரில் போய்ப் பார்த்தார். 'முத்துலட்சுமியைத் தமக்கு மணம் செய்து தந்தால் தான் சந்திரம்மாளுக்கு ஒரு மகனைப் போல குடும்பத்தோடேயே தங்கி விடுவேன்' என்றார்.

முத்துலட்சுமி மீது வற்புறுத்தல்கள் ஏற ஆரம்பித்தன. தந்தையும் அவளிடம் வாதாடினார். கடையில் முத்துலட்சுமி, சுந்தரரெட்டியை மணக்கச் சம்மதித்தார்.

முதல் சந்திப்பு நிகழ்ந்தது. அதில் முத்துலட்சுமிக்கு எந்தவித மனமாற்றமும் ஏற்படவில்லை. ஆனால் சுந்தரரெட்டி அடிக்கடி வந்து அவரிடம் சற்று அளவளாவி விட்டுப் போனதும், முத்துலட்சுமியின் மனம் மெதுவாக மாற ஆரம்பித்தது. சீக்கிரம் திருமண உறுதிக்குச் சின்னமாகத் தமது மோதிரத்தை முத்துலட்சுமிக்கு அணிவித்தார்.

அதற்குப்பின் ஒரு வருஷத்துக்குள் இருவருக்கும் பிரம்ம சமாஜ் முறைப்படி திருமணம் நடந்தேறியது.

திருமணம் முடிந்த பிறகு சிறிதுகாலம் சுந்தரரெட்டி விசாகப்பட்டணத்திலும், முத்துலட்சுமி சென்னையிலுமாக வேலை பார்த்து வந்தார்கள்.

சுந்தர ரெட்டி தமது அயல்நாட்டு வைத்தியப் படிப்புக்காக ரூபாய் இருபதினாயிரம் வரை கடன் வாங்கி இருந்தார்.

இப்போது கடன் கொடுத்தவர்கள் அவரைப் பலவிதத்திலும் நெருங்க ஆரம்பித்தார்கள். மருமகனின் நிலைகண்டு கண்கலங்கி

னூர் நாராயணசாமி. தமது செல்வாக்கைப் பயன்படுத்தி புதுக்கோட்டை மன்னரிடம் சொல்லி சுந்தரரெட்டிக்கு ஒரு உத்தியோகம் வாங்கிக் கொடுத்தார்.

அங்கே கண்ணும் கருத்துமாக தம் மருத்துவத்தைத் துவக்கினார் சுந்தரரெட்டி. சீக்கிரம் அவர் ஒரு கைராசி டாக்டர் என்று பெயர் பெற்றார். மாதம் மூவாயிரம் ரூபாய் வரை வரும்படி வர ஆரம்பித்தது.

முத்துலட்சுமி சென்னையிலும், சுந்தர ரெட்டி புதுக்கோட்டையிலும் இருந்து கொண்டு ஒருவரையொருவர் அடிக்கடி போய்ப் பார்த்துக் கொண்டார்கள்.

முத்துலட்சுமியின் முதல் பிரசவம் மிகவும் சோதனையாகி விட்டது. ஏற்கெனவே உடல் நலிந்தவர். ஆஸ்துமா வேறு படுத்திக் கொண்டிருந்தது. குடும்பத்தில் பிரச்னைகள் அதிகம். எல்லாவற்றுக்கும் முத்துலட்சுமியே

பிரம்பு நாற்காலிகள், பிரம்புக் கூடைகள் தொய்வு ஏற்பட்டால் கவலையே வேண்டாம். அவை களை வெந்நீரில் கழுவி வெயிலில் காய வைக்க வேண்டும். இப்படிச் செய்வதால் தொய்வு நீங்கி பிரம்புகள் இறுக்கமாகும்.

—லட்சுமிசிவம்.



ஈடுகொடுக்க வேண்டி வந்தது. முத்துலட்சுமியைப் பார்க்கும் சக டாக்டர்கள் அவர் உடம்பைக் கவனித்துக் கொள்ளும்படி அடிக்கடி வற்புறுத்துவார்கள்.

ஒன்பது மாதம் கூட முடியவில்லை. வீட்டில் ஒருநாள் சண்டை. அன்று இரவே வலி ஆரம்பித்து விட்டது. ஏழுநாட்களாகத் தொடர்ந்தது. முத்துலட்சுமியால் அந்த வேதனையைத் தாங்க முடியவில்லை.

அவரைப் பார்த்து வந்த டாக்டர் பிட்யூட்ரின் இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டுப் போய் விட்டார். அது கொடுப்பதற்கான தகுதியான நேரம் உற்பத்தியாகவில்லை. முத்துலட்சுமி எவ்வளவோ தடுத்தும் கேளாமலே இஞ்செக்ஷன் கொடுத்துவிட்டுப் போய் விட்டார்.

வலி தாங்காமல் அவர் அழ ஆரம்பித்தார். மற்றொரு பெண் டாக்டர் அப்போது அருகில் இருந்தார். அவரிடம் சொல்லி உடனே குளோரோபார்ம் கொடுக்கச் சொன்னார்.

நல்லவேளை அந்தச் சமயத்தில் அவர் வீட்டு அண்டை வீட்டுக்காரராக டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார் இருந்தார். அவர் உடனே வரவழைக்கப்பட்டார். முத்துலட்சுமிக்கு மயக்க மருந்துகொடுக்கப் பட்டது.

டாக்டர் முதலியார் ரொம்ப கவனமாகப் பார்த்து வர, குழந்தைக்கு எந்தவிதத் தீங்கும் ஏற்பட அவர் விரும்பவில்லை. மிகுந்த பாதுகாப்போடு கஷ்டங்களுக்கு இடையில் குழந்தையை வெளியில் எடுத்தார்.

மயக்கம் தீர்ந்தபின், தமது முதல் ஆண் குழந்தையை உயிரோடு பார்த்த போது முத்துலட்சுமி பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார்.

கணவர் சுந்தர ரெட்டிக்கு அறிவு தாகம் அதிகம். புதுக்கோட்டைப் பதவியை விட்டுவிட்டு, சென்னை மருத்துவக்கல்லூரியில் உதவிப் பேராசிரியர் பதவியை ஏற்க முன் வந்தார். சம்பளம் 250/- பெரிய வரும்படியை விட்டுச் சின்னதை ஏற்கிறாரே என்று மாமனாருக்குக் கவலை.

குழந்தை பெற்ற பின் ஓய்வில் இருந்த முத்து லட்சுமியும் சீக்கிரத்தில் தமது தொழிலில் இறங்கினார். அவர் மாத வரும்படி ஏராளமாகப் பெருகியது.

முதல் குழந்தை பிறந்த ஐந்து ஆண்டுக்கு பின்னர் முத்துலட்சுமிக்கு இரண்டாவது ஆண் குழந்தை பிறந்தது. தமது வருவாய் மூலம் ஒரு பெரிய குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார் முத்துலட்சுமி. அவரது தம்பி சட்டத்தில் தேர்ச்சி பெற்று வழக்கறிஞர் ஆனார். தங்கை நல்லமுத்து பட்டம் பெற்று சென்னை ராணிமேரி கல்லூரியில் விரிவுரையாளராகப் பதவி ஏற்றார். இன்னொரு தங்கை சுந்தரம்மாளுக்கு வயது 24.

அவருக்கு உடம்பு அடிக்கடி சரியில்லாமல் இருந்தது. பிரபல டாக்டர்கள் கவனித்துக் கொண்டார்கள். அது ஒரு வகை ஹிஸ்டீரியா, திருமணமானால் சரியாகும் என்றார்கள்.

ரவீந்திரநாத் தாகூரின் மாணவரான தேவல் என்கிற மராட்டிய இளைஞருக்கு சுந்தரம்மாளை மணம் செய்து வைத்தார்கள்.

திருமணத்திற்குப் பிறகும் சுந்தரம்மாளுக்கு நலம் ஏற்படவில்லை. பின்னர்தான் அவருக்குப் புற்று நோய் வந்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.

கல்கத்தாவில் பிரபல நர்ஸிங் ஹோமுக்கு அனுப்புவித்து எல்லாவித சிகிச்சைகளையும் செய்தார்கள். ஆனால் அவர் 1923—ல் இறந்து விட்டார்.

இந்தத் துக்கம் முத்துலட்சுமியை வெகுவாகப் பாதிக்க, அதை மறப்பதற்கு ஒருநாளைக்கு நாலு மார்பியா ஊசிப் போட்டுக் கொண்டாராம் முத்துலட்சுமி.

பெண்களின் நோய்களுக்கான ஆராய்ச்சிக்காக முத்துலட்சுமியை லண்டன் அனுப்ப

# Money *at Home* Melts

## But it Multiplies at KCUB

Money at home just melts away. You don't know how! Avoid unnecessary expenses. Save the money at KCUB and see it grows into a real wealth.




**THE KUMBAKONAM CITY UNION BANK LTD**

REGISTERED OFFICE : KUMBAKONAM-612 001

FOR PROTECTION AND GROWTH

இந்திய அரசு முன்வந்தது. பல இன்னல்களுக்கு இடையே அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு, தமது இரண்டு குழந்தைகளோடும், ஒரு பெண் துணையோடும் இங்கிலாந்துக்கு அவர் பிரயாணமானார்.

இங்கிலாந்தில் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கும் போது அவரது அருமைத் தம்பி ராமையா இறந்து போனார் என்ற செய்தி வந்தது. மற்றொரு பேரிடியாக இருந்தது அவருக்கு. உடனே இந்தியா கிளம்பிய அவரை இந்திய ஹை கமிஷனர் வற்புறுத்தி தங்க வைத்தார்.

இங்கிலாந்தில் இருந்த போது, பாரிஸில் நடந்த பெண்கள் மாநாடு ஒன்றுக்கு அவருக்கு அழைப்பு வந்தது. இந்தியப்பெண்கள் பற்றி அழகாக அங்கு சொற்பொழிவு ஆற்றிப் பலரது பாராட்டுக்களைப் பெற்றார் முத்துலட்சுமி. பின்னர், அவர் தமது படிப்பு முடிந்து இந்தியா திரும்பிய போது, அவரது தந்தை காலமானார்.

இந்தியா வந்ததிலிருந்து முத்துலட்சுமியின் கவனம் பொதுப் பணியில் திரும்ப ஆரம்பித்தது.

அவரது நினைப்பை அப்போது ஈர்த்தது தேவதாசி முறை. கோவில்களில் தேவதாசியர் நடனம் ஆடி வந்தனர். அதனால் நல்லதும் பொல்லாததும் நிறைய நடந்தன. இந்த முறையை ஒழிக்க வேண்டும் என்று விரும்பினார். பெண்களைப் பொட்டுக் கட்டி தேவதாசி ஆக்குவதை எப்படியும் நிறுத்தி விட வேண்டும் என்று உறுதி பூண்டார்.

தமிழ்நாடு பூராவும் இதற்காகச் சுற்றுப் பயணம் செய்து தீவிரமாகப் பிரசாரம் செய்தார் முத்துலட்சுமி.

1927—ல் காந்தி அடிகள் தமிழ் நாடு வந்திருந்த போது அவரிடமே தமது பணிகளை விளக்கி அவரது ஆசீர்வாதங்களையுமே பெற்றுக் கொண்டார்.

அந்நாளைய வெள்ளைக்கார கவர்னர் அவரை மேல்சபை அங்கத்தினராக நியமித்ததும் முத்துலட்சுமியின் சீர்திருத்த வேலைகள் அதிகமாயின. தேவதாசி ஒழிப்பு மசோதாவை சட்டசபையில் நிறைவேற்ற அரும்பாடு பட்டார்.

இதனால் வாழ்வை இழக்கும் தேவதாசிகளுக்கு உதவுவதற்கு சேவா சமாஜம் ஒன்றை நிறுவினார்.

1940—ல் பெண்கள், குறிப்பாக வசதி அற்றவர்கள், வாழ்க்கை அற்றவர்கள், இவர்களின் நலனுக்காகத் தொடங்கப்பட்டதே 'அவ்வை இல்லம்.' அதன் வளர்ச்சியில் தினமும் கண்ணும் கருத்துமாக இருந்து வர ஆரம்பித்தார்.

முத்துலட்சுமியின் கவனத்தை மற்றொரு பிரச்னையும் அடிக்கடி இழுத்து வந்தது. தங்கை சுந்தரம்மாள் இறந்ததிலிருந்து புற்றுநோய் ஆராய்ச்சிக்காக ஒரு நிறுவனம் தேவை என்று அவருக்கு எண்ணம் தோன்றலாயிற்று.

அதற்காக அயராது உழைத்து, கடைசியில் 1952—ல் நேருஜியின்கையால் ஆராய்ச்சிக் கழகத்திற்கு அடிக்கல் நாட்டிடச் செய்து தமது விருப்பத்தை நிறைவேற்றினார் அவர்.

இன்று அந்த நிறுவனம் இந்தியாவிலேயே தலைசிறந்ததாக விளங்குகிறது.

காந்தியடிகளைச் சந்தித்ததிலிருந்து முத்துலட்சுமியின் வாழ்க்கை தியாக வாழ்க்கையாக மாறியது. சுதந்திரப்போராட்டத்திலும் அவர் ஈடுபட்டார். கணவரும், மனைவியும் இதற்காகச் சிறைகூடச் சென்று வந்தார்கள்.

கணவர் சுந்தரரெட்டி 1943—ல் காலமானார்.

அதன்பின் தமது கடைசி நாள் வரை (1968) பொதுப் பணியும், பெண்கள் நலனுமே முதல் கடமையாகக் கொண்டு ஒரு லட்சியம் மிகுந்த தியாக வாழ்வையே வாழ்ந்து வந்தார் முத்துலட்சுமி.

---

பருத்திக் கொட்டையை தண்ணீர் விட்டு அரைத்தால் பால் போல் வரும். அதைப் பால் உண்ணியின் மேல் தடவி வந்தால் சில நாட்களில் அது மறைந்து விடும். நான் அனுபவப் பூர்வமாகக் கண்ட பலன்.

—ரமா சம்பத்.

---

பிரஷர் குக்கரின் காஸ்கட்டை குக்கரின் மேல் மூடியில் வெளிப்புறம் பொருத்தி வைத்து பின்னர் எடுத்து வைத்துச் சமைத்தால் காஸ்கட் நன்றாகவேலை செய்யும். ஆவி வெளியே செல்லாது.

—மேரி ராஜன்.

# கோலம்

மோகனா:





(19-1 நேர்ப்புள்ளி)

செல்வம்:

லிங்கக் கோலம்

18 புள்ளி 18 வரிசை (நேர்)



## இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள்: பொரியல்

முடிவு தேதி: 15-5-84

### சமையல் கூப்பன்

............... என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# PHOTO NEWS



தமிழ்நாடு கோழி வளர்ப்பு நிறுவனத்தினர் தமிழ்நாடு முழுவதும் பின்தங்கிய நிலையிலுள்ள சில ஏழைகளுக்குக் கோழி வளர்க்க நிதியுதவி செய்துள்ளனர். அதையொட்டி தண்டரை கிராமத்தில் நடந்த விழாவில் அமைச்சர் திருமதி. கோமதி சீனிவாசனும், டாப்கோ தலைவர் திருமதி. கல்யாணி ராமசுவாமியும் கலந்து கொண்டனர்.



எதிராஜ் மகளிர் கல்லூரியில் முதலாமாண்டு பி. காம். படிக்கும் குமாரி ஜெயந்தி பரத நாட்டிய உலகில் வேகமாக முன்னேறி வரும் இளம் தாரகை. இவருடைய பாத அசைவுகளும், முகபாவங்களும், நல்ல முக வெட்டோடு கூடிய உடற்கட்டும் பரத நாட்டிய நிகழ்ச்சிகளில் எழிலும் ஏற்றமும் அளிக்கின்றன.

—கே. எல். ராமன்.





சமீபத்தில் 'இரண்டாவது கட்ரெஜ் வேகத் தட்டச்சு சேம்பியன் ஷிப்' போட்டி சென்னையில் நடைபெற்றது. 35000-த்திற்கும் மேற்பட்டவர்கள் கலந்து கொண்டார்கள். தமிழ்நாட்டில் முதல் பரிசு பெற்ற திரு. பஞ்சாபகேசன் நிமிடத்திற்கு தொண்ணூற்றியோரு வார்த்தைகளை அடித்தார்! குமாரி வீணா பெண்களில் முதலாவதாக வந்தார். இவர் நிமிடத்திற்கு எண்பத்தியெட்டு வார்த்தைகளை அடித்தாராம்!

யூனிவர்சல் எக்சிகியூட்டிவ் கிளப்பும் விஜயலட்சுமி ஏஜென்சியாரும் இணைந்து நடத்திய சிறந்த மாணவ தலைவர் தேர்வு சமீபத்தில் கோவையில் நடந்தது. மாணவர்களின் ஒழுக்கம், திறமை, இசை, நாட்டியம், செல்வாக்கு, நிர்வாகத் திறமை, படிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் தேர்வு நடந்தது. இதில் சிறந்த மாணவர் தலைவியாக குமாரி சங்கீதா (அவினாசிலிங்கம் மனையியல் கல்லூரி, கோவை) தேர்ந்தெடுக்கப்பட்டு வெள்ளிக் கேடயம் பரிசு பெற்றார். மேலும் கோவையிலிருந்து பெங்களூர் சென்று வர இலவச விமான டிக்கெட்டும் பெற்றார்.

—கே. வி. கோபாலகிருஷ்ணன்.

உங்கள் குழந்தை அசாதாரண புத்திசாலி யாக இருக்க முடியும்.

குழந்தை அப்பாவைக் கொண்டிருக்கிறன்... புத்திசாலி!'' என்றோ, ''கீதா அம்மாவைப் போலத்தான் அசாத்திய சமர்த்து!'' என்றோ மெச்சிக்கொண்டால் அது ஓரளவுக்குத் தான் உண்மை. பிறப்பால் உண்டாகும் குணங்கள் ஒரு புறம் இருக்க சூழ்நிலையும் ஒரு குழந்தையின் வளர்ச்சியில் மிக முக்கியமான பங்கு வகிக்கிறது.

குழந்தை வயிற்றிலிருக்கும் போதே கல்வி புகட்டத் தொடங்கி விடலாமாம். கலப்பு மணம் புரிந்து கொண்ட ஒரு அமெரிக்க — ஜப்பானியத் தம்பதியர் இம் முறையைப் பின்பற்றி அதி புத்திசாலியான குழந்தைகளைப் பெற்றுள்ளனர். தாய்க்கும் குழந்தைக்கும் இடையே (E S P - Extra Sensory Perception என்கிற புலனுக்குத் தென்படாத தொடர்பு முறை நிலவுகிறது என்கிறார்கள் இத்தம்பதிகள். இந்தத் தொடர்பு முறையால் குழந்தை தாயின் மனத்தில் உள்ள சிந்தனைகளையும் யோசனைகளையும் அறிந்து கொள்கிறது. அதனால் சத்தான உணவும் உடல் ஆரோக்கியமும் எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் நல்ல



# அறிவறிந்த மக்கட் பேறு

பழக்க வழக்கங்களும் எண்ணங்களும். நல்ல புத்தகங்களைப் படியுங்கள், வீணை வாசியுங்கள், சுலோகம் சொல்லுங்கள் என்று நம் ஊரிலும் சொல்வார்கள். இத்தோடு இந்தத் தம்பதிகள் புதிதாகக் கூறுவது — பிறக்கப் போகும் குழந்தையுடன் மனத்தளவில் உரையாடுங்கள். நல்லெண்ணங்களைப் பரிமாறுங்கள்; வயிற்றைத் தடவிக் கூடக் கொடுக்கலாம்!

குழந்தை பிறந்தது முதல் அதனோடு அன்பாகப் பேசுங்கள். தந்தையும், தாயைப் போலவே குழந்தையிடம் அக்கறையும் ஆர்வமும் காட்ட வேண்டும்.



வளர்ந்த குழந்தைக்குப் புத்தகமும் ஏடும் மட்டும் கொண்டு கற்பிக்க முடியாது. அவர்கள் கண்டும், கேட்டும், செய்தும் கற்றுக் கொள்ள வேண்டும். படிப்பு ஒரு சுமையாக இல்லாமல் இனிமையான அனுபவமாய் இருக்கட்டும்.

வீட்டில் எந்த நிகழ்ச்சி நடந்தாலும், குழந்தைகளை அதில் ஈடுபடுத்துங்கள். வாசலில் காய் வாங்கும் போது, சமைக்கும் போது துணி துவைக்கும் போது — நீங்கள் செய்வதை அவர்கள் பார்க்கட்டும். 'போ, போ, வெளியே போய் விளையாடு' என்று விரட்டாதீர்கள். அவ்வப்போது சின்ன வேலைகளைச் செய்யச் சொல்லி அவர்களைப் பணியுங்கள். மூன்று வயதுக் குழந்தை ஆணானாலும் சரி, பெண் ஆனாலும் சரி, பட்டாணி உரித்தோ, சின்ன கர்சீஃப் துவைத்தோ, துணி மடித்தோ உங்களுக்கு உதவலாம். அவர்கள் எந்தக் காரியத்தைச் செய்தாலும் உடனே பாராட்டுங்கள். தவறாகச் செய்தால் திருத்தவும் வேண்டும். குழந்தைதானே என்று அலட்சியப்படுத்தாதீர்கள். அவர்கள் செய்யும் ஒவ்வொரு செயலும் முக்கியம் என்கிற உணர்வு அவர்களுக்கு வர வேண்டும்.

கதைகளையும் புத்தகங்களையும் உரக்கப் படித்துக் காட்டுங்கள். வளரும் குழந்தை

இருக்கும் வீட்டில் டீ.வி. ஓர் அபாயகரமான சாதனம். டீ.வி. சினிமா நிகழ்ச்சிகளைக் காட்டிலும் உயர்ந்த விஷயங்கள் உள்ளன என்பதைச் சிறுவர்களுக்கு உணர்த்த வேண்டும். நல்ல புத்தகங்கள் இதற்கு ரொம்ப உதவியாய் இருக்கும். சிறுகச் சேமித்து வைத்து வண்ணக் களஞ்சியம் போன்ற புத்தகங்களை வாங்கிக் கொடுங்கள்.

குழந்தைகளுக்கும் சேமிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொடுங்கள். மாதம் ஐந்தோ, பத்தோ கொடுத்து வீட்டில் உள்ளவர்களுக்குப் பிறந்த நாள் வந்தால் பரிசு வாங்கித் தரும் பழக்கத்தை உண்டாக்கலாம். இது சேமிக்கப் பழக மிகச் சிறந்த வழி. பெரியவர்களுக்கு வாங்கித் தருவதில் குழந்தைகளுக்கு அலாதி பெருமை, பூரிப்பு.

மிகமிக முக்கியம் — குழந்தைகளுக்கென்று ஒவ்வொரு நாளும் நேரம் ஒதுக்க வேண்டும். அது உங்களுக்கு மட்டும் அல்ல, அவர்களுக்கும் சௌகரியமான நேரமாய் இருக்க வேண்டும். இரவு 9.30 மணிக்கு மேல் அவர்களுடன் பேச உட்கார்ந்தால் பயன் இல்லை. செலவிடும் நேரம் மட்டுமல்ல, அந்த நேரத்தைச் செலவிடும் விதமும் முக்கியம். ஒரு மணி நேரம் ஹோம் ஒர்க் செய்ய உதவுவது மட்டும் போதாது. அரை மணி நேரமாவது கதை சொல்லியும் நண்பர்கள் பற்றிப் பேசவும், உங்கள் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளவும் செலவிடுங்கள். குழந்தையைப் பாப்பாவாக நடத்தாமல் பெரியவனாக நடத்துங்கள். அவனும் பெரியவனாக நடந்து கொள்வான்.

பள்ளிக்குப் போகும் பருவம் அடையாத மிகச் சிறிய குழந்தைகள் உங்கள் வீட்டிலிருந்தால், தாய்மார்கள் கூடிய வரையில் அவர்களை வீட்டில் வேலைக்காரர்களுடனோ, கிரெஷ்ஷிலோ, உறவினர்களுடனோவிட்டுவிட்டு அலுவலகம் செல்வதைத் தவிர்க்க வேண்டும். பொருளாதாரத் தேவையை முன்னிட்டே வேலைக்குப் போக நேர்ந்தால் வேறு வழியில்லை. ஆனால், உங்கள் வாழ்வின் பொன்னான பகுதியினை அனுபவிக்காமல் இழக்க நேரும். ஒன்று முதல் மூன்று நான்கு வயதான குழந்தைகளின் மழலை மொழியும், விளையாட்டும், சிரிப்பும் பிறகெப்பொழுதும் கிடைக்க மாட்டா. குழந்தையும் தன் தாயின் அன்பையும் அரவணைப்பையும், முழு கவனத்தையும் அதிகமாக நாடுவது இந்தப் பருவத்தில் தான். வாரம் ஆறு நாட்களுக்கு காலை 9 மணி முதல் மாலை 6.30-7.30 வரை வேலைக்குப் போகும் அம்மாவைக் காணாமல் ஏங்கும் சின்னஞ்சிறு குழந்தைகள் உண்டு. கூடிய வரையில்பொருளாதார நிலை ஓரளவுக்கு சீரடையும் வரை குழந்தை பெற்றுக் கொள்வதை ஒத்திப் போடலாம். இரண்டு வருடங்கள் வேலைக்குப்போய்ச் சம்பாதித்து, சேமித்து வைத்து, அடுத்த மூன்று வருடங்களுக்கு வேலைக்குப் போவதைத் தவிர்க்கலாம். நான்காம் வருடம் எங்கிருந்து வேலை கிடைக்கும் என்கிறீர்களா? முதலிரண்டு வருட அனுபவம் துணை நிற்கும். மனமிருந்தால் மார்க்கமுண்டு.

# ஆங்கிலம்

ஏழே மாதங்களில்
இலக்கணத்துடன் பேசவும்
எழுதவும் கற்றுக்கொள்ள
அடிப்படை ஆங்கிலம்

பட்டதாரிகள்
மூன்றே மாதங்களில்
சரளமாக ஆங்கிலத்தில் பேச
ஆங்கில உரையாடல்

## தபாலில் படியுங்கள்

பள்ளி கல்லூரி மாணவ மாணவியரும் ஆசிரியர்களும்
அலுவலகங்களில் பணி புரிவோரும்
குவைத் அபுதாபி பெஹ்ரைன்
போன்ற வெளி நாடுகளில் வசிப்பவர்களும் படிக்கலாம்

விபரமறிய 90 காசு ஸ்டாம்புடன் எழுதுக

மாயூரம் (மயிலாடுதுறை) **SNTC** 609 001

## பேனினால் தலைமுடி உதிரும்

நறுமணம் கமழும் கென்ஸ் தைலத்தை உபயோகித்து ஈறையும், பேனையும் அறவே ஒழியுங்கள், தலை முடியை பாதுகாத்துக் கொள்ளுங்கள்.



## கென்ஸ்

'சிறந்த பேன் நாசினி'
ஈறுகளையும் கொல்லும் பென்சோகெயின் கலந்தது.










பார்ம் ப்ராடக்ட்ஸ்
தஞ்சாவூர்-613 007 தமிழ்நாடு
விற்பனை விவரங்களுக்கு எழுதவும்.

Chhaya/PP/203

செய்தி மலர்:

# ஆண் எலிக்குத்தான் ஆபத்து!

'பெண்களுக்கு கொழுப்பு அதிகம். அதனால் ஆண்களை விட குளிரைத் தாங்கும் ஆற்றல் அதிகம் உண்டு. பொதுவாக ஆண்களை விடப் பெண்கள் சராசரி மூன்றரை ஆண்டுகள் உயிர் வாழ்கின்றனர் 'பூப்பு' எய்தும் வரை வேகமாக வளரும் பெண் வளர்ச்சியில் அதோடு நின்று விடுகிறாள். ஆணின் வளர்ச்சியோ நிற்பதில்லை. 45–55 வரைதான் ஒரு பெண் இனவிருத்தி செய்ய முடியும். ஆணுக்கு 60–70 வரை இந்த சக்தி உண்டு. சீக்கிரம் முதிரும் பெண் சீக்கிரப் உதிரவும் வேண்டும். ஆனால் ஆண்களோ முடிவை தாமே வலியத் தேடிக் கொண்டுபோகிறார்கள். உடம்பைக் கெடுத்துக் கொள்ளும் பழக்கங்களில் சிக்கிக் கொண்டு விடுகிறார்கள். பெண்களோ இந்த விஷயத்தில் மிகவும் எச்சரிக்கையாக இருக்கிறார்கள். வலியப் போய் ஆபத்தில் மாட்டிக் கொள்வதில்லை.'

தினமணியில் வெளியாகி இருந்த இந்த ஆராய்ச்சிக் கண்டுபிடிப்புகளை மாஸ்கோ 'வளர்ச்சி உயிரியல் ஆராய்ச்சி' நிலையம் வெளியிட்டிருக்கிறது.

ஆராய்ச்சிக்கு எலிகளைப் பயன்படுத்தினார்களாம். மூலையில் சிறு ஓட்டை போட்டிருந்த ஓர் இருட்டு அறையில் ஆண் – பெண் எலிகள் விடப்பட்டன. அதையொட்டிய வெளிச்சமான மற்றொரு அறையில் ஒரு பூனை விடப்பட்டது. துவாரத்துக்கு அந்தப் பக்கம் என்ன இருக்கிறது என்று அறியும் ஆவலினால் உந்தப்பட்டு சில ஆண்



எலிகள் அந்த ஓட்டை வழியே சிரமத்துடன் நுழைந்து அடுத்த அறைக்குச் சென்று பூனைக்கு இரையாகிவிட்டன. பெண் எலி ஒன்று கூட இந்தப் பரீட்சையில் இறங்கவில்லையாம்.

* * *

சுபாவமான எச்சரிக்கை காரணமாகத்தானோ என்னவோ சாதனை விஷயத்தில் ஆண்களே முன்னே நிற்கிறார்கள். எவெரெஸ்டு சிகரத்தைப் பிடித்தது முதல் விண்வெளிப் பயணம் செய்வது வரை முன்னே போனவர்கள் எல்லாம் ஆண்களே. வெகு நாளைக்குப் பிறகு தான் ரஷ்யா ஒரு பெண்ணை மேலே அனுப்பி வைத்தது.

300 கிலோமீட்டர் உயரத்திலிருந்து பூமியைப் பார்த்தால் எப்படி இருக்கும்? ''மிகவும் அழகாக இருக்கிறது. எல்லாம் ஒழுங்காக இருக்கிறது'' என்று சென்ற மாதம் சோவியத் விண்கலன் சோயுஸ் டி–11–ல் 'ஜம்'மென்று பிரயாணம் செய்துவிட்டு வந்த ராகேஷ் சர்மா சொன்னார். ஏப்ரல் 3–ம் தேதி புறப்பட்டு ஒரு வாரம் பிரரஷ்ய வீரர்களுடன் உல்லாசமாக விண்வெளிப் பயணம் செய்த ராகேஷ் ஹைதராபாத்தைச் சேர்ந்தவர். திருமணமானவர். வயதான அப்பா, அம்மா இருக்கிறார்கள்.

* * *

விண்வெளி வீரராவதற்கு முதல் தகுதி



உடம்பும் மனமும் சீராக இருக்க வேண்டும். இந்திய விமானப்படையைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும். ரஷ்யா போன்றநாடுகள் தாராள மனப்பான்மையுடன் ஒரு இந்தியனை மேலே அனுப்புவதற்கு சம்மதிக்க வேண்டும்.

ரஷ்யர்கள் சகோதர கம்யூனிஸ்டு நாடுகளிலிருந்தும் பிரான்சிலிருந்தும் பதின்மூன்றுபேரை தமது விண்வெளிக்கலனில் அழைத்துச் சென்றிருக்கின்றனர். இந்தியாவின் முறை கடைசி. இதற்குப் பிறகு அயல் நாட்டினரை அழைத்து செல்லப் போவதில்லை என்று ரஷ்யர்கள் அறிவித்து விட்டனர்.

இனி நாமே சொந்த விண்கலன் தயாரித்து மேலே அனுப்பினால் தான் அடுத்த இந்தியருக்கு சான்ஸ். செயற்கைக் கோளைத் தயாரிப்பது அவ்வளவு பெரிய விஷயமல்ல. ஆனால் அதை விண்வெளியில் செலுத்தும் ராக்கெட் தயாரிப்பு ரொம்ப சிக்கலான தொழில் நுட்பத்துடன் கூடியது.

✲ ✲ ✲

ராக்கெட் தயாரிப்பில் நாம் மிகவும் பின்தங்கி இருக்கிறோம். சமீபத்தில் தான் 40 கிலோ கிராம் எடையுள்ள ஒரு சின்ன கிரகத்தை எஸ். எல். வி-3 ராக்கெட் மேலே அனுப்பி வைத்தது. ராகேஷ் பிரயாணம் செய்த சோயுஸ் கோள் 6850 கிலோ கிராம் எடையுள்ளது. இதுவிஷயத்தில் நாம் முன்னேற்றமடைய நிறையச் செலவும்காலமும் ஆகும்.

✲ ✲ ✲

**சோ**யுஸ் டி—11—விருந்து மாதக் கணக்காய் மேலேயே சுற்றிக் கொண்டிருக்கும் ரஷ்ய சல்யூட் விண்வெளிக் கலத்துக்குத் தாவி அங்கேயே ஏழு நாட்கள் இருந்து பல சோதனைகள் செய்து பார்த்துத் திரும்பி இருக்கிறார் ராகேஷ். களைபின்றி மிதக்கும் நிலையில் யோகாசனப் பயிற்சி செய்திருக்கிறார். இந்து மகா சமுத்திரப் பிராந்தியத்தில் இந்தியாவுக்கு அடுத்த பகுதிகளிலும், இந்தியாவில் பாதியையும் புகைப்படமெடுத்து வந்திருக்கிறார். அவற்றை ஆராய்ந்து எண்ணை வளம் கனிவளம். நீர் வளம் மிகுந்த பகுதிகளைத் துல்லியமாகக் கண்டு அறியலாமாம்.

விண்வெளியில் முதல் இந்தியன் என்ற பெருமை ராகேஷுக்கு கிடைத்திருக்கிறது. இதை சாத்தியமாக்கிய பெருமையில் பெரும் பங்கு ரஷ்யாவைச்சார்ந்தது என்றாலும் ஆசியாவிலேயே முதலில் விண்வெளிக்குப் போன மனிதன் ஒரு இந்தியன் என்று நாம் பெருமைப் படலாம்.

✲ ✲ ✲

**வி**ண்வெளிப் போட்டியில் ரஷ்யாவை விட ஒரு படி முன்னேறியிருக்கிறது அமெரிக்கா. அந்நாட்டின் 'சாலஞ்சர்' விண்வெளி குடுவை ஒரு சபர்டன் ரயில் போன்ற பயணம் போல விண்வெளிக்குப் போய் முழுதாகத் திரும்ப வந்து மீண்டும் பல முறை பிரயாணம் செய்து கொண்டிருக்கிறது. ஏப்ரல் இரண்டாம் வாரத்தில் அதில் மேலே சென்ற அமெரிக்க விண்வெளி வீரர்கள் ஒரு புதிய சாதனையைச் செய்து விட்டு வந்தனர். குடுவையை விட்டு வெளியேறி விண்வெளியில் நீச்சலடித்து, முடமாகி போயிருந்த ஒரு செயற்கைக் கோளை மீட்டு அதை அங்கேயே ரிப்பேர் செய்து மீண்டும் சுற்றவிட்டு வந்தனர்.

**'ரங்கராஜ்'**

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh.

வேர்க்குரு
தாக்கும்போது ...

**ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றுதான், அதன் ஒப்பற்ற 3-வழிச் செயலால் வியர்க்குருவை தடுக்கிறது, முறியடிக்கிறது.**

ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒன்றில் தான், திருமணம் பெற்ற மருந்துக் கலவை அடங்கியுள்ளது—அது, மூன்று தீவிரமான வழிகளில் செயல் படுகிறது.

- **தடுத்தல்**

  இதன் பாக்டீரியோஸ்டாடிக் செயல், பாக்டீரியா கிருமிகள் பெருகுவதைத் தடுக்கிறது.

- **நிவாரணம்**

  சுகந்த மணமுள்ள ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர், வியர்வையை உறிஞ்சுகிறது. இதமளித்து விரைவான நிவாரணம் தருகிறது.

- **செயல்**

  ஜான்ஸன்ஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர் ஒப்பற்ற கொடிடாஸிடிக் செயல் உள்ளது. அது, பாதிக்கப்பட்ட சருமத்தை விரைவாக மாசு மருவற்றதாக்குகிறது.






குடும்பம் முழுவதற்குமான பாதுகாப்பு

Johnson & Johnson

OBM-2516/TM

ஜான்ஸனஸ் ப்ரிக்லி ஹீட் பவுடர்- வேர்க்குருவிலிருந்து உங்களுக்கு சிறந்த பாதுகாப்பு.

REGISTERED No. TN MS (S) 231
Registered as a Newspaper in Sri Lanka